# கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்

## முதல் பாகம்

## நாநா சீவ வாதக் கட்டளை
## கீதாசாரத் தாலாட்டு
## சசிவன்ன போதம்




**கோவிலூர் ஆதீனம்**

**கோவிலூர்**

# கோவிலூர்மரபு வேதாந்த நூல்கள்

## முதல் பாகம்

**நாநா சீவ வாதக் கட்டளை**

**கீதாசாரத் தாலாட்டு**

**சசிவன்ன போதம்**

**வெளியீடு**

**சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்**

***கோவிலூர் ஆதீனம்***

**கோவிலூர் மடாலயம்**

**கோவிலூர் – 630 307**

**2006**

*உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்*
*நிலஉ லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவோம்.*

*வானவ ரசமாந் தொடர்பினால் உலகோர் வழுத்துறும் வன்னி ஐங்கரனை*
*வாநவ ரதந மணியறு முகனை மாசறு கொற்றவாள் இறையை*
*வானவர் முதுவன் பாலன வலவன் வணங்குநற் றிருநெலை மாதை*
*வானவ ரதனா முத்திரா மேச வள்ளலை வணங்கி வாழ்த் திடுவாம்.*

*தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்*
*அந்தமிலா இன்பநமக் காவானும் – எந்தம்உயிர்*
*தான்ஆகு வானும் சரணாகு வானும் அருட்*
*கோனாகு வானுங் குரு.*

உ

சிவமயம்

## ஆசியுரை

### கோவிலூர் ஆதீனம்
### ஸ்ரீ ல ஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்

பாரத நாட்டின் தலையாய பெருமை நமது ஆன்மீக உயர்வு பற்றியதாக உள்ளது. ஆன்மீகத்தில் தலையாயது வேதாந்தம். நாமனைவரும் 'இன்பம் எங்கே உள்ளது' எனத் தேடுகிறோம். 'அது உனக்குள்ளேயேதான் இருக்கிறது' என்பது வேதாந்தம். இன்பமும் மன அமைதியும் பெற்று, அவற்றை நிரந்தரமாக்கிக் கொள்வதில் தொடங்கி, உண்மையான தேடுதல் யாது என அறிவுறுத்தி, 'உயிருடன் உள்ளபோதே முத்தி' என்பதற்கான வழிகாட்டலை அருளுவது வேதாந்தம் மட்டுமே. இவற்றையெல்லாம் வாழ்வில் நடைமுறைப்படுத்த உதவுவன வேதாந்த சாத்திர நூல்கள்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வேதாந்த நூல்கள் சமஸ்கிருத மொழியில் கற்றுக் கொடுக்கப்பட்டன. வேதாந்த விருப்ப முடையவர்களில், தமிழ் மட்டுமே அறிந்தோர், சமஸ்கிருதம் பயிலுவதில் உச்சரிப்பு இடர்ப்பாடுகள் உண்டு. சாமான்ய மக்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற உயரிய நோக்கோடு, இக் கருத்துக்களை எளிமையாக்கிக் கொடுத்த பல பெரியோர்களும் உண்டு. சுமார் 700 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தவத்திரு தத்துவராய சுவாமிகள் இத்தகையவர். தமிழ்மற்றும் சமஸ்கிருத மொழிகளில் வல்லவரான சுவாமிகள், அவரது குருவை மகிழச்செய்ய, சங்கரரின் அத்வைத வேதாந்தக் கருத்துக்களையெல்லாம் திரட்டி, அவற்றை தமிழ்ச்செய்யுட்களாக உருவாக்கினார். இவ்வாறு பல ஞான நூல்கள் சுவாமிகளால் இயற்றப்பட்டன. இந்நூல்களைக் கற்றவர்கள், பின்னர், தமிழ் வழி வேதாந்த மரபு ஒன்றை உருவாக்கினர்.

சுமார் 180 ஆண்டுகளுக்கு முன், நகரத்தாரான முத்திராமலிங்கர், தமிழ் வழியில் வேதாந்தம் முழுமையும் பயின்று, அதனை மற்றோருக்கு கற்றுக்கொடுக்க விரும்பி இத் திருமடத்தினை உருவாக்கினார். வேதாந்தக் கருத்துக்களனைத்தையும் உள்ளடக்கிய தமிழ் நூல்களைத் தேர்வு செய்து கோவிலூரில் கற்பித்து வந்தார். ''கற்க வேண்டியவை அனைத்தையும் தாய் மொழியிலேயே கற்கவேண்டும்' எனவும், 'கற்க விரும்புபவனுக்கு, ஏழ்மை, சாதி வேறுபாடுகள் தடையாகாது' என்பதையும் வற்புறுத்தும்

இக்காலத்தவருக்கு முன்னோடியாகத் திகழ்ந்து, இதற்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தவர் முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் ஆவார்.

இத்திருமடத்தில் கடந்த 180 ஆண்டுகளாகக் கற்பிக்கப்பட்டுவருவது 16 வேதாந்த நூல்கள் ஆகும். இந் நூல்களெல்லாம் மொழிபெயர்ப்பாக அமையாது, தமிழ்ச் செய்யுட்களாக இயற்றப்பட்டதால், இவை மூலத்திற்கு இணையெனப் போற்றப் படுகின்றன. ஆனால் அக்கால வழக்கிற்கேற்ப மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளன. உண்மைப் பொருளான பிரம்மத்தைப் பற்றி நூல்கள் மூலமாகப் படித்தறிந்து கொள்வதற்கும் மேலாக, பிரம்மத்தையே உணர்வதற்குப் பயன்படுமாறு இந்நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இங்கு கற்பிக்கப்படும் தமிழ்வழி வேதாந்தப் பாடத்திட்டம் கல்லூரிப் படிப்பிற்கு இணையானது. 'கோவிலூர் மரபு' எனப் பெயர்பெற்றது. வேதாந்தம் மிகுதியாகக் கற்பிக்கப்படும் வடமாநிலங்களிலேயே, இப்பாடத்திட்டம் மற்றும் மரபுதனை அங்குள்ள முறைக்கு ஒப்பாகக் கருதப்பட்டு, 'கோவிலூர் மண்டலி' எனப் பெருமைப் படுத்தப்பட்டுள்ளது.

தற்கால மாணவர்களுக்கு எளிதில் புரியும்படி அமைய வேண்டும் எனும் பேரவாவினால், இந் நூல்களின் மூலம் பதம் பிரித்தும் மற்றும் பதவுரைகளின் மணிப்பிரவாள நடையை மாற்றி தமிழில் எளிய உரையாகச் செய்தும் மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளன.

இந்நூல்களைத் துறவியர் மட்டுமின்றி, குடும்பத்தவரும் கற்கலாம். இலவச உணவு, உடை, இருப்பிடத்துடன், உலகியல் கவலைகளற்ற சூழலில் இந் நூல்களைக்கற்றுப் பயனடைய விரும்புவோர் வரவேற்கப்படுகிறார்கள்.

மேலும் இந்நூல்கள் நாம் மடாதிபதியாகி 10ஆம் ஆண்டு விழா கொண்டாடப்படும் சமயத்தில் வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம். இதை நமது திருமடத்தை நிறுவிய ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் திருப்பாதக் கமலங்களில் சமர்ப்பித்து அவரது பேருளை நம் அனைவருக்கும் அருளப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் சத்

ஸ்ரீ சற்குருநாதன் துணை

உ

சிவமயம்

## அணிந்துரை

அயன் படைப்பாம் இவ்வுலகில் ஏழு வகைப் பிறப்புச் சீவர்கள் உள்ளனர். இவர்களுள் மனித சரீரம் படைத்த சீவர்களே மேலோர் ஆவார்கள்.

மனித சரீரத்தில் தான் இகலோக பரலோக அறிவு உள்ளது. இந்த அறிவினால், இறைவனால் செய்யப்பட்ட சுருதி(வேத)ப் பிராமாணம் உண்டாகிறது. இப்படிப் பல பிறவிகள் அடைந்தும், சுவர்க்காதிப் பதவிகளும் இவ்வுலகில் போக பாக்கியம் பெற்றும் மனித சீவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. அவன் இலட்சியமான மாறாத பெரிய, துக்க கலப்பில்லாத பேரின்பம் கிடைக்கவில்லையே என்று ஏமாற்றம் கொள்கிறான். சுருதியை ஆராய்கிறான். அதில் கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்று பிரிவுகளில் தத்துவ ஞானமே சர்வதுர்க்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தி ரூப முத்தியைக் கொடுக்குமே அல்லாது, வேறு எதுவும் கொடுக்காது என்று தெரிந்து கொள்கிறான். அப்படித் தெரிந்து விவேகம் உடையவர்கள் சற்குருவைத் தேடிச் செல்கின்றனர். இவர்களைத்தான் ஜிஞ்ஞாசு (ஞான விருப்பம் உடையவன்) முமுட்சு (மோட்ச இச்சையுடையவன்) என்று சாத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. இத்தகைய முமுட்சுகளைத்தான் காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் வருக! வருக! என வரவேற்கிறது.

காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் சுமார் 180 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகளால் திருநெல்லை அம்மையின் பேரருள் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது. இம்மடத்தில் தமிழ் வழி வேதாந்த பாடங்கள் நடத்தப்படுகின்றன. அந்தச் சாத்திரங்களின் வரிசை வருமாறு:-

1. நாநா சீவ வாதக் கட்டளை
2. கீதாசாரத் தாலாட்டு
3. சசிவன்ன போதம்
4. மகாராஜா துறவு
5. வைராக்கிய சதகம்
6. வைராக்கிய தீபம்
7. இலட்சணா விருத்தி
8. வேதாந்த சூடாமணி
9. கைவல்லிய நவநீதம்
10. விவேக சூடாமணி
11. அஞ்ஞவதைப் பரணி
12. பஞ்ச தசி
13. ஈசுவர கீதை
14. பிரம்ம கீதை
15. பகவத் கீதை
16. ஞான வாசிட்டம்

மேற்படி நூல்களுக்கு ஆதாரமாக முதலில் படிக்கவேண்டிய நூல்கள், குட்டித்திருவாசகம், சீடாச் சாரம், கோவிலூர் குருமாஞ்சலி, பட்டினத்தார் பாடல்கள் ஆகும். இக்கிரம நூல்களைக் குருமுகமாகக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற முறையில் முமுட்சுகளின் வாழ்க்கை அமையும்.

இந்நூல்களைக் கற்க வரும் முமுட்சுகளுக்கு விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் ஆகிய நான்கு சாதனங்கள் வேண்டும். இவைகளே தகுதியாகும். ஆனால் மேற்படி சாதனங்களை முழுதும் பெற்றிருக்கவில்லை என்றாலும் எட்டில் ஒரு பாகம், அதாவது 1/8 பாகமாவது, பெற்றிருந்தால் கூட அவரை பரிசீலனை செய்து சேர்த்துக்கொண்டு முழுமை பெறச் செய்வர். மற்றபடி கல்வி, வயது, திருமணம் ஆனவரா அல்லது ஆகாதவரா என்ற தகுதிகளைக் கொள்வதில்லை. இன்னும் இந்து மதத்தின் உட்பிரிவுகளான சைவம் முதலிய சமய, ஜாதி, இனம் இவைகளையும் தகுதிகளாகக் கொள்வதில்லை. மேற்படி சாதனங்கள் பெற்றவர்கள், இல்லறத்திலும் உள்ளனர். அவர்களும் இங்கு பாடங்களைக் கேட்டு ஞானம் பெற்றிருக்கின்றனர். இனியும் பெறலாம்.

நமது சந்நிதானம் அவர்கள் மேற்படி நமது கோவிலூர் சம்பிரதாய நூல்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். அதாவது, இப்போது முதல் ஆறு நூல்கள் மட்டும் இரண்டு பாகங்களாக வெளிவருகின்றன. பிறகு மற்ற நூல்களும் வெளிவரத் தீவிரமான ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

இந்த நூல்களில் நாநாசீவவாதக் கட்டளைக்கு விளக்கமான முன்னுரை எழுதப்பட்டுள்ளது. அப்படியே மற்ற ஐந்து நூல்களுக்கும் அமைக்கப்பட்டுள்ளது. இதில் முதல் நூல் நமது அத்வைதக் கொள்கைக்கு ஆதாரமானது. அதனை மனனம் செய்வது நல்லது. இல்லையேல் தினசரி பாராயணம் செய்வது போல தொடர்ந்து படித்து வரலாம். அவ்வாறு செய்தால் மேல் சாத்திரங்கள் படிக்கும் போது விளக்கம் பெறப் பெரிதும் உதவும்.

முதல் மூன்று நூல்கள் பிரம்ம ஞானத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பவைகளாகும். நான்காவது, ஐந்தாவது, ஆறாவது ஆகிய நூல்கள் வைராக்கியத்தை திடப்படுத்தப் பெரிதும் உதவும் அற்புத நூல்கள் ஆகும்.

ஆக இந்த ஆறு நூல்களும் மூலமும் பொழிப்புரையுமாக அமைக்கப்பட்டுள்ளன. இதைப் படிப்பவர்கள் வேதாந்தக் கருத்துக்களை நன்கு அறிய முடியும். இப்படிப் பட்ட நூல்களை வெளிவர உதவுமாறு, அமரர் கல்கியின் மகளான திருமதி ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கு நமது சந்நிதானம் அவர்கள் அருளாணை பிறப்பித்தார்கள். அதற்கு அவ்வம்மையார் தமக்கு உதவியாக யாரை அனுப்புவீர்கள் என வினவ, தமது சீடரும் குமாரபாளையம் ஆனந்த ஆஶ்ரமத்தில் கோவிலூர் வேதாந்த மடம் சம்பிரதாயப்

பாடங்களைக் கிரமமாக மனனம் செய்து பாடம் கேட்டவருமான திரு. குருநாதன் அவர்களை அனுப்புவோமெனக் கூறி அனுப்பினார்கள். ஆக மேற்படி இருவர் முயற்சியினால் மேற்படி ஆறு நூல்கள் வெளிவந்துள்ளன.

நமது 12–வது பட்டம் மகா சந்நிதானம், திருப்பெருந்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகளின் பத்தாண்டுகள் அருளாட்சியில் கோவிலூர் வேதாந்த மடம் கர்மம், பக்தி, ஞானம் என்று சொல்லப்படும் நமது வேதாந்தத்தின் மூன்று பிரிவுகளில் சீரும் சிறப்புமாக வளர்ச்சி அடைந்துள்ளது.

*அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்*
*அற்குப ஆங்கே செயல்,*

என்ற திருக்குறளின்படி நிலையில்லாத தமது செல்வத்தை எல்லாம் நிலையான தரும காரியங்களைச் செய்வதற்கே சுவாமிகள் செலவிட்டுக்கொண்டிருக்கிறார்கள். இம்மனப்பரிபாகம் பெரிதும் பாராட்டுக்குரியதாகும். இந்த அணிந்துரையில் நமது சந்நிதானம் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பாராட்டுவதற்குச் சொற்கள் கிடைக்கவில்லை என்பது மிகையாகாது.

நமது மகா சந்நிதானம் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழவும், திடகாத்திரமாக இருக்கவும் எல்லாம் வல்ல மாயா விஷிட்ட காரணப் பிரம்மம் பேரருள் புரிவதாகுக.

திருமதி. ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கும், திரு. குருநாதன் அவர்களுக்கும், குமாரபாளையம் ஆனந்தாஸ்ரம முமுட்சுக்கள் சார்பாகப் பெரிதும் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமது மகா சந்நிதானம் அவர்கள் வாழ்க! வளம் பெறுக!

கோவிலூர் வேதாந்த மடம் வாழ்க! வளம் வளர்க!

மேற்படி மடத்துச் சம்பந்தப்பட்ட அனைவரும் வாழ்க! வளம்பெறுக!

இப்படி ஒரு அணிந்துரை எழுத வாய்ப்புக் கொடுத்த மகா சந்நிதானம் அவர்களுக்கும் திருவருளுக்கும், குருவருளுக்கும் நன்றி! வணக்கம்! வாழ்த்து!

சுபம்

வேணும் ஸ்ரீ சற்குருநாதன் துணை

தவத்திரு. சோம. சச்சிதானந்த சுவாமி,
அத்வைத ஆசிரியர்,
குமாரபாளையம்.

# பொருளடக்கம்

## முதல் பாகம்

# முகவுரை

வேதத்தில், 'சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி' ஆகிய மோட்சம் அடைதற்கு முக்கிய சாதனமாக ஞானம் கூறப்பட்டுள்ளது. அந்த ஞானத்திற்குச் சாதனமாகக் கரும உபாசனையாதிகள் கூறப்பட்டுள்ளன. அக் கருமங்களை விதிப்படி ஈசுவர அர்ப்பணமாக, பயனை விரும்பாமல் செய்யின் உள்ளத்திலுள்ள மலம் (பாபம்) நீங்கும். விதிப்படி உபாசனைகளைச் செய்யின், மனம் அசை வற்று ஒரு நிலைப்படும். இதனையே விக்ஷேப நீக்கம் என்பர். இவ் விரண்டின் சித்தியே சித்த சுத்தி யாம்.

இச்சித்த சுத்தி வந்த பின், விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதகங்களையும் அவதி (முடிவு) வரை பெற்றவனே தீவிர அதிகாரி. அவற்றினை அரை குறையாகப் பெற்றவன் மந்த அதிகாரி. அதிகாரிகள் சற்குருவை அடைந்து சிரவண, மனன, நிதித்தியாசனங்கள் செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்யின் தத்துவ ஞானம் உண்டாம். மந்த அதிகாரிக்கு வேதத்தின் முக்கிய சித்தாந்தத்தைச் சொல்லின் விளங்காது; அதில் நம்பிக்கையும் உண்டாகாது. ஆகையால், அவர்கட்குக் கீழ்படிகளைக் கூறி, அவற்றின் வாயிலாய் அவர்களை மேல் நிலைக்குக் கொண்டு வர வேண்டும்.

மந்த அதிகாரிகளை நோக்கித் தைத்திரீய உபநிடதத்தில் நாநா சீவ வாதம் சொல்லப்பட்டுள்ளது. அதனை அநுசரித்துச் சேஷாத்திரி சிவனார் என்னும் பெரியார் இந் நூலைச் செய்தார். அவர் வட மொழி, தென் மொழிகளில் வல்லுனர். திட அபரோட்ச ஞானி, தீன தயாளு. சற்குண சம்பன்னர். இவரிருந்த காலம்,இடம் முதலியன அறியப்பட வில்லை. தாம் ஐயந்திரிபின்றி அடைந்த அபரோட்ச (பிரத்தியட்ச) அநுபவத்தைக் கருணையினால், மந்த அதிகாரிகளும் அடைந்துய்யுமாறு செய்யத் திரு உள்ளம் கொண்டார்.

சாம வேதத்தின் முடிபாயுள்ளது சாந்ததோக்கிய உபநிடதம். அதில் ''தத்துவமசி' என்னும் மஹாவாக்கியம் கூறப்பட்டுள்ளது. அதனால் போதிக்கப்படும் அரிய பொருள் சீவப் பிரம்ம ஐக்கிய மாகிய அத்துவித சொரூபமே. அதனை அத்தியாரோப அபவாதக் கிரமமாகிய யுக்தியால் ஆசிரியர் இந் நூலில் கூறியுள்ளார். (அத்தியாரோபம் என்பது பொய்யாகத் தோற்றுவித்தல், அபவாதம் என்பது பொய்யென்று நிச்சயித்து ஒடுக்கல்)

இதில் தானாக தோற்றும் தேகம், இந்திரியம் முதலிய அநாத்ம வஸ்துக்கள் இத்தனை வகையானவை, இன்ன இயல்புடையன, இன்னவாறு ஆரோபமாய்த் தோன்றின, பின்னர்த் தம்தம் காரணங்களில் இன்னவிதம் ஒடுங்குகின்றன என்பது நன்கு விளக்கப்பட்டுள்ளன.

மேலும், காரிய மெல்லாம் ஒடுங்கிவிட, இறுதியில் ஒடுங்காமல் எஞ்சியிருக்கும் ஆத்ம தத்துவம் இன்ன இயல்புடையது என்றும், அதுவே சீவனது யதார்த்த வடிவம் என்றும், அதுவே பிரம்ம சொரூபம் என்றும் காட்டுகிறது.

இவ்விதம் அதிகாரிக்குத் தத்துவ ஞானத்தை ஐயம் திரிபின்றி உண்டு பண்ணி முத்தி நிலையை அளிப்பது இந்நூலாகும். ஆகவே, 'சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி' வடிவ மோட்சத்தினை அடைய விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இந்நூல் அத்தியாவசியம் இருக்கத் தக்கது. இந்நூலினை வாங்கித் திரிகரண சுத்தி யோடு சற்குரு வாயிலாகக் கேட்போர் யாவரும் பொய்யினை அகற்றி மெய்ந்நிலையாகிய முத்தி உறுவர் என்பது திண்ணம்.

## சிறப்புப் பாயிரம்

இப்பியி னிடையே எழும்இர சதம்போல்
என்றுமாய் இலகிஇன் பாகி,
ஒப்பிட ஏதும் இன்றிய பிரமத்து
உற்றிடும் பகுதிமுன் னாய,
அப்பிர பஞ்ச முறைமையைத் தூல
அருந்ததி நியாயமே என்னச்,
செப்பினன் யாரும் தெளிவுறச் சேஷாத்
திரிசிவன் என்னுமா தவனே.

# நாநா சீவ வாதக் கட்டளை

**ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்**
**ஞானகுரு வாணியை உள்நாடு.**

1. சுத்தப் பிரமமாய் இருக்கின்ற சர்வ சாட்சியினிடத்திலே, அக்கினியில் சூடுபோல அபின்னமாக ஒரு சத்தி உண்டு; அந்தச் சத்தி அவ்வதீதப் பிரமத்தில் அடங்கியிருக்கும்போது அதற்குச் சுத்தப்பிரமம் என்று பெயர். அந்தச்சத்தி விசிரிம்பித்து சுத்தப் பிரமத்தை வியாபிக்கும்போது அப்பிரமம் பரை வியாபகத்துக்குள் இருந்தபடியினாலே, அதற்கு பரப்பிரமம் என்று பெயராம். இலக்ஷண சூன்யமாய் இருக்கின்ற இந்தச் சத்திக்குப் பிரமத்தினுடைய சந்நிதானத்தில், புருட சமூகத்திலே ஸ்திரீக்கு இன்பம் சனித்தாற்போல, அவிகிர்த சத்துவ, ரஜஸ், தமோ குணங்கள் உண்டாயின. இவற்றில், சுத்த சத்துவத்திற்கு ஆனந்தரூப சத்தி என்று பெயர். சுத்த ரஜஸிற்கு சித்ரூப சத்தி என்று பெயர். சுத்த தமஸிற்கு சத்ரூப சத்தி என்று பெயர். இவற்றில், காரணமான ஆனந்தரூப சத்தியுடனே பரப்பிரமம் கூடிச் சர்வானந்தம் என்னும் சுழுத்தி அவத்தையை அடைகின்றபோது, பரப்பிரமம் என்கின்ற பெயர்போய் பரமானந்தர் என்கிற பெயர் வந்தது. இந்தப் பரமானந்தர் சித்ரூப சத்தியுடனே கூடிச் சர்வப் பிரகாசம் என்னும் சொப்பனாவத்தையை அடைகின்றபோது, பரமானந்தர் என்னும் பெயர் போய் தேசோமயர் என்னும் பெயர் வந்தது. இந்தத் தேசோமயர் சத்ரூப சத்தியுடனே கூடி சர்வவியாபகம் என்னும் சாக்கிராவத்தையை அடைகின்றபோது தேசோமயர் என்னும் பெயர்போய்ப் பரிபூரணர் என்னும் பெயர் வந்தது.

2. இந்த அகண்ட பரிபூரண சச்சிதானந்தப் பிரமத்தினிடத்திலே, *சுத்தியில் ரஜதம்போல, மூலப்பிரகிருதி என்னும் ஒரு சத்தி உண்டு. அந்த மூலப் பிரகிருதியும் விகிர்த குணமாகிய முக்குணத்தோடு கூடியிருக்கும். அந்தப் பிரகிருதியின் சத்துவ குணத்தை மாயை என்றும், சர்வக்ஞ உபாதி என்றும், ஈசுர காரண சரீரம் என்றும் சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மல சலப்பிரதிபிம்பம் போலப் பிரமம் சுலட்சணமாகப் பிரதி

---

* *புருடனிடத்துச் சாமர்த்திய ரூபசத்திபோலப் பிரமத்தின் கண் அனாதி சித்தமாயிருக்கிற மூலப் பிரகிருதியென்னும் சத்திக்குச் சுத்தி இரஜதத்தை உபமானம் சொன்னது, அநிர்வசனியத் தன்மையென்னும் பொருள்தோன்ற என்க.*

பிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்னியத்தை சர்வக்ஞனாகிய ஈசுரன் என்று சொல்லப்படும். இந்தச் சத்துவ குணமாயையினிடத்திலே, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸு சத்துவத்தில் தமஸு என மூன்று குணங்கள் உண்டு. இவைகளில், சத்துவத்தில் சத்துவம் பிரதானமாகும்போது, அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தை இரக்ஷிக்கையினால் விஷ்ணு என்றும், சத்துவத்தில் ரஜஸு பிரதானமாகும்போது, அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தை சிருஷ்டிக்கையினால் பிரமா என்றும், சத்துவத்தில் தமஸு பிரதானமாகும்போது, அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தை உபசம்மாரம் பண்ணுகையினால் உருத்திரன் என்றும் சொல்லப்படுவான். இப்படி மூலப்பிரகிருதியின் சத்துவகுண கற்பனை சொல்லப்பட்டது.

3. இனி, மூலப்பிரகிருதியின் இரஜோ குணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து, அவித்தைகள் என்றும், சீவகாரண சரீரங்கள் என்றும், ஒன்றற்கொன்று தாரதம்மியமாகச் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலின சலப் பிரதிபிம்பம்போலப் பிரமசைதன்னியம் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதன்னியங்களை கிஞ்சிக்ஞர் என்றும், சீவசிதாபாசர் என்றும், பிராக்ஞர் என்றும் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் ரஜஸில் சத்துவம், ரஜஸில் ரஜஸு, ரஜஸில் தமஸு என மூன்று குணங்கள் உண்டு. இரஜஸில் சத்துவம் பிரதானமாகும்போது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் தத்துவக் ஞானநிஷ்டன் ஆவன். இரஜஸில் ரஜஸு பிரதானமாகும்போது அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் காமக் குரோதபரனாய்க் கர்மநிஷ்டன் ஆவன். இரஜஸில் தமஸு பிரதானமாகும்போது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் சோம்பல், நித்திரை, மயக்கம் அகிய இவைகளை அடைவன். இப்படி மூலப் பிரகிருதியின் இரஜோகுண கற்பனை சொல்லப்பட்ட்து.

4. இனி, மூலப் பிரகிருதியின் தமோ குணத்திற்கு ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சத்திகள் உண்டு. இவ்விரண்டில், ஆவரண சத்தியானது தத்துவ ஞானியையும், ஈசுரனையும் தவிர, மற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத் திரயம், சிதாபாசன், சாட்சி சைதன்னியம் என்னும் இவைகளின் ஒன்றற்கொன்று உள்ள பேதம் தெரிய வொட்டாமல் மறைக்கும். இதனால் மறைபட்ட சீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நான் என்று அபிமானிப்பர். இந்த அபிமானத்தை, அகங்காரக் கிரந்தி என்றும், சம்சாரபந்தம் என்றும் சொல்லப்படும். சற்குரு கடாக்ஷத்தினாலே, இந்த ஆவரணம் நீங்கி, இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதம் தெரிகின்றதே முத்தி. இப்படி ஆவரணசத்தியின் காரியம் சொல்லப்பட்டது.

5. இனி, விக்ஷேப சத்தியினின்றும் சத்த தன்மாத்திரையான ஆகாசம் தோன்றிற்று. ஆகாசத்தினின்றும் பரிச தன்மாத்திரையான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூப தன்மாத்திரையான அக்கினி தோன்றிற்று. அக்கினியினின்றும் ரஸ தன்மாத்திரையான அப்பு தோன்றிற்று. அப்புவினின்றும் கந்த தன்மாத்திரையான பிருதிவி தோன்றிற்று. இந்தச் சூக்ஷும பஞ்சபூதத்திற்குக் காரணமாய் இருக்கின்ற விக்ஷேப சத்தியினிடத்திலே, தமஸில் சத்துவம், தமஸில் ரஜஸு, தமஸில் தமஸு என்னும் இவை அற்பம் கருவாக இருந்தபடியால் அதன் காரியமாகிய இந்தத் தன்மாத்திரைகளான பஞ்ச பூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தன. இந்தப் பஞ்ச பூதங்கட்குத் தன்மாத்திரைகள் என்றும், அபஞ்சீகிருத பூதங்கள் என்றும், சூக்ஷும பூதங்கள் என்றும், முக்குண பூதங்கள் என்றும் சாஸ்திரங்களில் நாமம் சொல்லப்படும்.

6. இந்தச் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்களும், ஸ்தூல பூதங்களும் தோன்றும். அஃது எங்ஙனம் எனின்:– ஆகாசம் முதலான பஞ்ச பூதங்களின் சத்துவ அம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில், ஆகாசத்தின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச் சகலமான கேள்விக்கும் இடம் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், வாயுவின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக் கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மனம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், அக்கினியின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதுஇன்னது என்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்கு.ப் புத்தி என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், அப்புவின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் அப்புவைப் போல விஷயங்களில் பற்றி இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச் சித்தம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், பிருதிவியின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப்போலக் கடினமாக நின்று நானென்று அபிமானிக்கின்றது. இந்த அபிமான விருத்திக்கு அகங்காரம் என்று பெயர்.

7. இன்னும், ஆகாசம் முதலான பஞ்ச பூதங்களினுடைய சத்துவ அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியம் என்று சொல்லப்படும். இவைகளில், சுரோத்திரம், ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால் ஆகாசத்தின் குணமான சத்தம் மாத்திரத்தை அறியும். துவக்கு, வாயுவின் அம்சம் ஆனபடியால் வாயுவின் குணமான பரிச மாத்திரத்தை அறியும். சக்ஷு, அக்கினியின் அம்சம் ஆனபடியால் அக்கினியின் குணமான ரூபமாத்திரத்தை அறியும்.

சிங்குவை, அப்புவின் அம்சம் ஆனபடியால் அப்புவின் குணமான ரஸ மாத்திரத்தை அறியும். கிராணம் பிருதிவியின் அம்சம் ஆனபடியால் பிருதிவியின் குணமான கந்த மாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக்கரணத்தில், ஐந்து மாத்திரையும் ஒன்றாய்க் கூடினது கொண்டு ஐந்து இந்திரியங்களினாலும், ஐந்து விஷயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்தில் உண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், ஆகப்பத்தும் சத்துவ அம்சம் ஆனபடியால் ஞானசாதனம் ஆயின.

8. இன்னும், ஐந்து பூதங்களினுடைய இரஜோ அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது வியானாதி பஞ்ச வாயுக்கள். இவைகளில், வியானவாயு ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால் ஆகாசத்தைப்போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயு வாயுவின் அம்சம் ஆனபடியால் வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியின் அம்சம் ஆனபடியால் அக்கினியைப் போல சாடராக்கினியாக உஷ்ணித்துக் கொண்டு குதத்தைப் பற்றி நின்று, உண்ட அன்ன பானாதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவாயு அப்புவின் அம்சம் ஆனபடியால் சரீர நடுவான நாபித்தானத்தில் நின்று உண்ட அன்னரசங்களை அப்புவைப்போல இழுக்கும். உதானவாயு பிருதிவியின் அம்சம் ஆனபடியால் கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப்போலக் கடினமாக நின்று, உண்ட அன்ன பானாதிகளைக் கடையும். இந்தப் பஞ்ச வாயுக்களையும் அல்லாமல், வாந்தி பண்ணுவிக்கின்றது நாகன் என்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மன் என்றும், குறுகுறுத்துத் தும்மச் செய்கின்றது கிரிகரன் என்றும், கொட்டாவி கொள்ளச் செய்கின்றது தேவதத்தன் என்றும், வீங்கச் செய்கின்றது தனஞ்சயன் என்றும், வேறே ஐந்து வாயுக்கள் உண்டென்று சிலர் சொல்லுவார். இவ்வைந்தும் பிராணனுடைய தொழில் ஆனபடியால் வேறல்ல.

9. இன்னும், ஆகாசம் முதலிய பஞ்ச பூதங்களினுடைய இரஜோ அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியம் என்று சொல்லப்படும். இவைகளில், ஆகாசத்தின் இடமாக வாக்கு வசனிக்கும். வாயுவின் இடமாகப் பாணி இடுதல், ஏற்றல் செய்யும். அக்கினியின் இடமாகப் பாதம் நடக்கும். அப்புவின் இடமாகப் பாயுரு மலசலாதிகளை வெளியிலே தள்ளும். பிருதிவியின் இடமாக உபஸ்தம் சுகத்தைப் பண்ணும்; இந்த ஐந்தும் தனித்தனியே இருந்ததுகொண்டு மறுதொழில் செய்யமாட்டாது. வியானாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும், ஒன்றாய்க் கூடினது கொண்டு, கர்மேந்திரியம் ஐந்தின் வழியினாலும் ஐந்து தொழில்களையும் செய்து முடிக்கும். இந்த வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஆகப் பத்தும் இரஜோ அம்சம் ஆனபடியினால் கிரியா சாதனம் ஆயின.

அந்தக்கரணம்–5, ஞானேந்திரியம்–5, வாயுக்கள்–5, கர்மேந்திரியம்–5, ஆக இருபது தத்துவமும் சூக்ஷும சரீரம் என்று சொல்லப்படும். இந்தச் சூக்ஷும சரீரத்தை மாயாப் பிரதிபிம்பனாக இருக்கின்ற ஈசுரன், அவித்தையாப் பிரதிபிம்பர் ஆகிய சீவர்கள் அநேகர் ஆகையால் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சரீரமாகச் சிருஷ்டித்து அளித்தான். இப்படி சூக்ஷும சரீர கற்பனை சொல்லப்பட்டது.

10. இனி ஸ்தூல பூத உற்பத்தி சொல்லுகின்றோம். அஃது எங்ஙனம் எனின்:– தமோ அம்சமாய் இருக்கின்ற ஐந்து பூதங்களையும், ஒவ்வொன்றை இரண்டு இரண்டாகப் பகுத்து, முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து, இரண்டாம் பாதி ஐந்தில், தன் அம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது பஞ்சீகரணம் என்று சொல்லப்படும். இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களிலே ஆகாசத்திலே பரிச, ரூப, ரஸ, கந்தம் ஆகிய நான்கு குணங்களும் வியாப்பியம் ஆனபடியால், அதிருசியமாய்ப் போக நிசகுணமாகிய சத்தம் திருசியமாம். வாயுவிலே ரூப, ரஸ, கந்தம் ஆகிய மூன்று குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சத்தமும், நிச குணமாகிய பரிசமும் திருசியமாம். அக்கினியிலே ரஸ, கந்தம் ஆகிய இரண்டு குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணங்களாகிய சத்த, பரிசமும், நிச குணமாகிய ரூபமும் திருசியமாம். அப்புவிலே, கந்தகுணம் வியாப்பியம் ஆனபடியினால் அதிருசியமாய்ப் போகக் காரண குணங்களாகிய சத்த, பரிச, ரூபமும், நிச குணமாகிய ரஸமும் திருசியமாம். பிருதிவியிலே, காரண குணங்களாகிய சத்த, பரிச, ரூப, ரஸமும், நிச குணமாகிய கந்தமும் திருசியமாம்.

11. முன் சூக்ஷும பூதங்களினின்றும் சூக்ஷும சரீரங்கள் தோன்றினாற் போலப், பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களினின்றும், ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியாய் இருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் தோன்றின. இவற்றுள், ஆறு தத்துவங்களாவன:– சர்மம், உதிரம், மாமிசம், சனாயு, அத்தி, மஜ்ஜை என்னும் இவைகளாம். நால்வகைத் தோற்றங்களாவன:– சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் என்னும் இவைகளாம். மூவகைச் சாதிகளாவன:– இகலோக பரலோகபுத்தி இருவகையும் கொடுக்கின்ற மனுட சரீரம் உத்தம சாதி. பரலோக புத்தியை மறைத்து, இகலோக புத்தியை மாத்திரம் கொடுக்கின்ற பசு, பக்ஷி முதலானவை மத்திம சாதி. இரண்டு லோக புத்தியையும் மறைத்திருக்கின்ற மரம், செடி, கொடி முதலியவை அதம சாதி. இப்படிப் பிருதிவி தத்துவமாய் இருக்கின்ற பூலோகத்தில் கண்டாற்போல, அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம் என்னப்பட்ட தத்துவங்களாய், நிரைநிரையே இருக்கின்ற பிதிர்லோகம், தேவலோகம், யட்ச கந்தர்வ சித்தர் லோகங்களிலும், நட்சத்திரமாகத்

தோற்றுகின்ற சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர் சித்தர் என்னப் பட்டவர்கள் உத்தம சாதி. காமதேனு, ஐராவதம், அன்னம், கருடன் முதலானவை மத்திம சாதி. கற்பக விருட்சம், பாரிசாதம் முதலானவை அதம சாதி. இந்தத் தூல சரீரமே அன்னமய கோசம். சூக்ஷும சரீரம் மூன்று கோசங்களாய் இருக்கும். அஃது எங்ஙனம் எனின்:– பிராண வாயுவும், கர்மேந்திரியங்களும் கூடிப் பிராணமயகோசம், மனதும், ஞானேந்திரியங்களும் கூடி மனோமய கோசம், புத்தியும், ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமய கோசம். காரண சரீரமே ஆனந்தமய கோசம். இப்படிப் பஞ்ச கோசம் சொல்லப்பட்டன.

12. ஆறு தத்துவங்களாய் இருக்கின்ற ஸ்தூல சரீரத்திலே, இருபது தத்துவங்களாய் இருக்கின்ற சூக்ஷும சரீரம் இருக்கின்றது. அஃது எப்படி எனின்:– கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களுள் சிங்நுவையும், வாயில் இருக்கும். உதான வாயுவும், மனதும் கண்டத்தில் இருக்கும். பிராண வாயும், புத்தியும் இருதயத்தில் இருக்கும். சமான வாயுவும், சித்தமும் நாபியில் இருக்கும். அபான வாயுவும், பாயுருவும் குதத்தில் இருக்கும். வியான வாயுவும், ஞானேந்திரியங்களுள் துவக்கும், அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே உள்ளமும், கருவிழி நுனியிலே சக்ஷு இந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்ரேந்திரியமும், மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும், கழுத்திற்கு மேலே தனித்தனியே இருக்கும். கழுத்திற்குக் கீழே, கை, கால், குய்யங்களில், பாணி, பாதம், உபஸ்தம், மூன்றும் தனித்தனியே இருக்கும். இப்படி ஸ்தூல சரீர தத்துவங்கள் ஆறு, அதில் குடிபுகுந்த சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபது; ஆகத் தத்துவங்கள் இருபத்தாறும், பஞ்ச பூதங்களின் காரியம் ஆனபடியினாலே ஒருமைப்பாடாகக் காரிய சரீரம் என்று சொல்லப்படும்.

13. அவித்தையில் பிரதிபிம்பித்த சிதர்பாசன், சாக்கிரத்திலே இந்த இருபத்தாறு தத்துவங்களுடனே கலந்த நின்றபோது, விசுவன் என்றும், வியாவகாரிக சீவன் என்றும் சொல்லப்படுவன். சொப்பனத்திலே, ஸ்தூல சரீரத்தைவிட்டு, அந்தக் கரணத்துடனே கூடி நின்ற போது, தைஜசன் என்றும், பிராதிபாசிகசீவன் என்றும், சொப்பன கற்பிதன் என்றும் சொல்லப்படுவன். சுழுத்தியிலே, காரிய சரீர தத்துவங்கள் இருபத்தாறையும் கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தியிருக்கும்போது, பிராக்ஞன் என்றும், பாரமார்த்திகசீவன் என்றும் சொல்லப்படுவன். பிரம சைதன்னியமும், சாக்கிரத்திற்குச் சாட்சியாய் இருக்கும்போது, சீவாத்மா என்றும், சொப்பனத்திற்குச் சாட்சியாய் இருக்கும்போது, அந்தராத்மா என்றும், சுழுத்திக்குச் சாட்சியாய் இருக்கும் போது, பரமாத்மா என்றும், அவத்தாத்திரய சாட்சியாய் இருக்கும்போது, ஞானாத்மா என்றும்,

கூடஸ்தன் என்றும் சொல்லப்படும். இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவத்தைகளும் சொல்லப்பட்டன.

14. இனி, ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவத்தைகளும் சொல்லும்படி: கற்பிதப் பிரபஞ்ச வடிவமாகத் தோற்றுகின்ற தூல பஞ்ச பூதங்களும், அந்தப் பூதங்களிலே தோன்றிய மூன்று சாதியாய் இருக்கின்ற தூல சரீர சமஷ்டியும் கூடி, ஈசுர தூல சரீரம் என்றும், விராட் என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், வைசுவானரன் என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம் பிரமா என்றும் சொல்லப்படும். சூக்ஷும பூதங்கள் ஐந்தும், அந்தப் பூதங்களிலே தோன்றிய, சூக்ஷும சரீர சமஷ்டியும் கூடி, ஈசுர சூக்ஷும சரீரம் என்றும், இரண்யகர்ப்பம் என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பனாவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், சூத்திராத்மா என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான் சைதன்னியம் விஷ்ணு என்றும் சொல்லப்படும். இந்தத் தூலம், சூக்ஷுமம் இரண்டின் வாசனையுடனே கூடியிருக்கின்ற மாயை, ஈசுர காரண சரீரம் என்றும், அவ்வியாகிருதம் என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தி அவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், அந்தர்யாமி என்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்னியம், உருத்திரன் என்றும் சொல்லப்படும். சீவன், தன் மூன்று அவத்தைகளிலும், தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற இருபத்தேழு தத்துவங்களுடனும் நான்என்று கலந்து நிற்கின்றது போல, ஈசுரனும் தன் மூன்று அவத்தைகளிலும் தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற முப்பத்து இரண்டு தத்துவங்களுடனும் கலந்து நிற்பன். ஆகையினாலே, சீவ சிதாபாசன் தன் சரீர மாத்திரமே கலந்து நிற்பன். ஈசுரன், தன் சரீரமாகிய சகல சரீரங்களோடும், சகல பிரபஞ்சங்களோடும் கலந்து நிற்பன். இந்த இரு வகைக்கும் சாட்சியாய் இருக்கின்ற பிரம சைதன்னியமும், சகல சரீரங்களிலும் சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து, அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து எல்லை யற்றிருக்கும்.

15. சீவனுக்குத் தூல சரீர வியவகாரத்திற்கு, அன்னமயமான சட்கோச தத்துவங்கள் – 6, சூக்ஷும சரீர தத்துவங்கள் – 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்–5 ஆகத் தத்துவங்கள்–31. சூக்ஷும சரீர வியவகாரத்திற்கு, சூக்ஷுமசரீர தத்துவங்கள் 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம் 5 ஆகத் தத்துவங்கள்–25. காரண சரீர வியவகாரத்திற்கு, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்–5. சீவ வியவகாரத்திற்கு, சீவன், ஈசுரன், பிரமம்–3. சாட்சி வியவகாரத்திற்கு, சாட்சி–1. ஈசுரனுக்குத் தூல சரீர வியவகாரத்திற்கு, சமஷ்டிஅன்னமயகோச தத்துவங்கள்–6, சமஷ்டி சூக்ஷும சரீர தத்துவங்கள்–20, சமஷ்டி சீவன், அவித்தை 2, ஈசுரன், வித்தை, பிரமம்–3, தூல பூதங்கள்–5 ஆகத் தத்துவங்கள் –36. சூக்ஷும சரீர வியவகாரத்திற்குச் சமஷ்டி சூக்ஷும சரீர

தத்துவங்கள்–20, சமஷ்டி சீவன், அவித்தை–2 சூக்ஷும பூதங்கள்–5, வித்தை, ஈசுரன், பிரமம்–3 ஆகத் தத்துவங்கள்–30. காரண சரீரவியவகாரத்திற்கு வித்தை, ஈசுரன், பிரமம்–3. ஈசுர வியவகாரத்திற்கு ஈசுரன், பிரமம்–2. பிரம வியவகாரத்திற்கு பிரமம்–1. இந்திரிய வியவகாரத்திற்கு இந்திரியம்–1, சட்கோச தத்துவங்கள் – 6, அந்தக்கரணம்–5, வாயு–5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்–5 ஆகத் தத்துவங்கள்–22. மனோராச்சிய வியவகாரத்திற்கு, அந்தக்கரணம்–5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்–5 ஆகத் தத்துவங்கள் – 10. இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும், நிலையும் சொல்லப்பட்டன.

16. இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்ற முறை சொல்லுகின்றோம். சகல சீவரிடத்திலும் இருக்கின்ற தூல சரீரங்கள் அனைத்தும், தமக்கு ஆதாரமான தூல பூதங்களிலே மடிந்து பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூல பூதங்களும், பஞ்சீகரணம்விட்டுத் தன்மாத்திரைகளான தமோகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரண்யகர்ப்ப அவத்தை என்று சொல்லப்படும். சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும் கட்டுவிட்டுப் பூதங்களினுடைய சத்துவ குணமும், இரஜோ குணமுமாக ஒடுங்கும்; அஃது எங்ஙனம் எனின்:– சகல பிராணிகளிடத்திலும் இருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும், உதானவாயுவும், உபஸ்தேந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்ஙுவையும், சமானனும், பாயுருவும் அப்புவில் ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமும் அக்கினியில் ஒடுங்கும். மனதும், துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாகும். இந்தச் சூக்ஷும பூதங்களும், பிருதிவி அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியில் சுவறி ஒடுங்கும். அக்கினியும், விளக்குப்போல வாயுவில் அணைந்து ஒடுங்கும். வாயுவும், ஆகாசத்திலே ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேப சத்தியில் ஒடுங்கும். ஆவரண சத்தியும், விக்ஷேப சத்தியும், மூலப் பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய், ஆலமரம், ஆலம் விதையில் ஒடுங்கினால்போல, இன்னம் ஒரு சிருஷ்டிக்கு வித்தாக, அவித்தையிலும் மாயையிலும் ஒடுங்கும். இந்த அவித்தையும், மாயையும் அதி நுண்மையான மூலப் பிரகிருதி என்று சொல்லப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்த விந்துவும், பாம்பு என்கின்ற பெயர்போய்ப் பழுதையாகக் கண்டாற்போலத் தனக்கு அதிஷ்டான சைதன்னியமான பிரம சைதன்னிய மாத்திரமாக ஒடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப்பொருள் ஒன்றாகக் கண்டு, அதுவே சுபாவ சித்தமாய், நிசமாயிருக்கின்ற தன் வடிவு எனக்கண்டு தெளிந்து, கவலை கெட்டிருக்கின்றவனே சீவன் முத்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கம் சொல்லப்பட்டது.

**17.** இப்படித் தோன்றி ஒடுங்கின தத்துவங்கள்–36, அவையாவன:– பூதங்கள்–5, ஸ்தூல சரீர தத்துவங்கள்–6, சூக்ஷும சரீர தத்துவங்கள் –20, காரண சரீரமான மாயை, அவித்தை–2, இவற்றில் பிரதிபிம்பித்த சீவன், ஈசுரன்–2, இவைகட்கெல்லாம் அதிஷ்டான சைதன்னியமாய் இருக்கின்ற பிரமம்*–1 இவையாம். இவைகளில், பூதங்கள்–5, மாயை–1, மாயாப் பிரதிபிம்பரான ஈசுரன்–1, பிரமம்–1 ஆக இந்த எட்டும் சகல பிராணிகளுக்கும் சமுதாயமாக* அனுபவிக்கப்படும். மற்றை இருபத்தெட்டும், அவன் அவனுக்கு பிருதக்* ஆக அனுபவிக்கப்படும். அஃது எங்ஙனம் எனில், பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் எல்லோருக்கும் ஆதாரம் இல்லை. மழை மறுக்கில், எல்லோருக்கும் சலம் இல்லை. தேயு இல்லாதிருந்தால், பாகம் இல்லை. வாடை, தென்றல் இல்லாவிட்டால், வாயு இயக்கம் இல்லை. ஆகாசம் இறக்கில் ஒருவருக்கும் அவகாசம் இல்லை. மாயையும், மாயாப் பிரதிபிம்பரும் இறக்கில் சகல சமயங்களுக்கும் தெய்வம் இல்லை. பிரமம் இல்லையேல் ஒருவருக்கும் அறிவு இல்லை; ஆகையால் இந்த எட்டும் எல்லோருக்கும் சமுதாயமாம். பிருதக் எங்ஙனம் எனின், ஒருவனுக்கு ஸ்தூல சரீரம் இறக்கில், எல்லோருக்கும் ஸ்தூல சரீரம் இறவாதபடியினாலும், சூக்ஷும சரீரத்தில் ஒருவனுக்கு அங்க வைகல்யம்* வந்தால், எல்லோருக்கும் வாராதபடியினாலும், முத்தராயிருந்த சுகர் வாமதேவர் முதலியோருக்கு அவித்தையும், சீவனும் இறந்துபோயிருக்க, மற்றையோருக்கெல்லாம் அவித்தையும், சீவனும் இறவாதபடியினாலும், இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும், அவனவனுக்குப் பிருதக் என்பதில் சந்தேகமே இல்லை.

**18.** இந்தத் தத்துவங்கள் முப்பத்தாறில், எப்போதும், தானாகவே காணப்படுகிற தத்துவம் ஒன்று. எப்போதும் தனக்கு அந்நியமாகக் காணப்படுகிற தத்துவங்கள் ஏழு. தான் ஆகவும், தனக்கு அந்நியம் ஆகவும், அனுபவிக்கப்படுகிற தத்துவங்கள் இருபத்தெட்டு; அஃது எங்ஙனம் எனில், அவத்தாத்திரய சாட்சியாய் இருக்கின்ற பிரம சைதன்னியம், எல்லா அவத்தைகளிலும், தான் ஆக விளங்குகையினாலும், மற்றைத் தத்துவங்கள் போலத் தனக்கு அந்நியமாக விளங்காதபடியினாலும், அந்தப் பிரம சைதன்னியம் ஒன்று மட்டுமே தான் ஆகக் காணப்படுகிறது. பஞ்ச பூதங்கள், மாயை மாயாப் பிரதிபிம்பர் ஆக ஏழும் தம் தம் தொழிலான வெட்டு, கொத்து, உழவு, பஞ்ச கிருத்தியம், தசாவதாரம் முதலானவை, ஒரு காலும் தன்னுடைய தொழிலாகக் காணப்படாத படியினாலே, தனக்கு அந்நியங்களே அல்லாமல் தான் ஆகமாட்டா. மற்றை

---

* *பிரமத்திற்குத் தோற்றம் ஒடுக்கம் கூறினது நாம கற்பனையைப் பற்றி யென்க.*
* *சமுதாயம் – பொது.*
* *பிருதக்கு – வேறு.*
* *வைகல்யம் = குறைவு.*

இருபத்தெட்டுத் தத்துவங்களுள்ளே நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிருகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண், நான் பெண், நான்கறுவல், சிவலை, கட்டையன், நெட்டையன், நான் பருத்தேன், இளைத்தேன் என்று தான் ஆக வழங்குகிற, ஸ்தூல சரீரம் ஆறு தத்துவங்களும், மற்றொரு வேளையிலே, தனக்குப் புறம்புபட்டு என் மாடு, என் கன்று என்றாற்போல, என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாளாயிற்று என்று, தான் வேறு தூல சரீரம் வேறாக வழங்குகிறபடியினாலும், நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகித்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன் என்று தான் ஆக வழங்குகிற சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும், மற்றொரு வேளையிலே, தனக்குப் புறம்புபட்டு, என் வீடு, என் உடைமை (என் மாடு என் கன்று) என்றாற்போல, என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என் கை, என் கால், என் மனம், என் புத்தி, என் அகங்காரம், என் சித்தம், என் பிராணன் என்று, தான் வேறு, அவைகள் வேறாக வழங்குகிறபடியினாலும், நான் அறிவேன், அறியேன் என்று, தான் ஆக வழங்குகிற அஞ்ஞானமும், சிதாபாசனும், மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு, என் அஞ்ஞானம், என் சீவன் என்று வழங்கக் கண்டபடியினாலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும், தான் ஆகவும், தனக்கு அந்நியம் ஆகவும், வழங்குகின்றது சித்தம்.

19. இப்படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சீடன் கேட்கும்படி: இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும் தான் ஆனால், சாட்சியைப்போல, ஒரு தன்மையாகத் தோற்ற வேண்டுமே அல்லாமல், பஞ்ச பூதங்களைப் போலத் தனக்கு அந்நியமாகக் காணக் கணக்கில்லை. இந்த இருபத்தெட்டும், தனக்கு அந்நியமேயானால், எப்போதும் புறம்புபட்டே இருக்க வேண்டுமல்லாமல், தான் ஆக வழங்கக் கணக்கில்லை. தானுமாய் தனக்கந்நியமுமாய் இருக்கு மென்கிறது, இருட்டாதித்தன் என்றாற் போலும், வெள்ளாள தீக்ஷிதன் என்றாற் போலும், விருத்தமாம் என்னும் சங்கைக்கு:– பரமார்த்தமாகத் தான் என்கின்றது ஒரு வகையும், அத்தியாசத்தினாலே தான் என்கின்றது ஒரு வகையும், ஆக இருவகையும் உண்டு. சாட்சி சைதன்னியத்தைத் தான் என்கின்றது, பரமார்த்தம் அல்லாமல் உபசாரம் அல்ல. தனக்கு அந்நியமாய் இருக்கின்ற இந்த இருபத்தெட்டையும், தான் என்கின்றது, கட்டையைக் கள்ளன் என்றாற்போலும், பழுதையைப் பாம்பு என்றாற்போலும், புத்திர தாராதிகளைத் தான் என்றாற்போலும், மயக்கமே அல்லாமல் உண்மை அல்ல. ஆகையினால், அஞ்ஞானகாலம் தொடங்கித் தான் அல்ல என்று காணப்பட்ட தத்துவங்கள்– 7, இப்போது இப்படி விவேகம் பண்ணின பின், தான் அல்ல என்று

காணப்பட்ட தத்துவங்கள் – 28, ஆக இந்த 35 தத்துவங்களையும், அததற்குச் சொன்ன, குணம் குறிகளுடனே கூடக் காண்கின்ற அறிவானது, கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவே இருந்து, கடத்தைப் பார்க்கின்றதுபோல, அவைகளை அறிகின்றது என்றும், முப்பத்தாறாம் தத்துவமாகிய அதுவே தான் என்றும், அதுவே பரமசிவம் என்றும், கலக்கமறத் தெளிந்தவனே சிவ தரிசனம் உடைய சீவன் முத்தன் என்று சொல்லப்படுவன் என்று உத்தரம்.

20. இப்படிப் பிரமமே தாம் என்றும், மற்றை முப்பத்தைந்து தத்துவங்களும் தமக்கு அந்நியம் என்றும், பிரித்து அறியாத அவிவேகிகள், அகங்காரக் கிரந்தியினாலே, புத்திர தாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கிறோம் என்கிற மூடகரம் போல, இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் தம் தொழில் என்று மயங்குகின்றபடியினாலே, இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினால் கட்டுப்பட்டு, அந்தக் கர்மத்தின்படியே சனன மரணாதி சம்சாரத்திலே அடிபடுகிறோம் என்று மயங்குவர். பிரம சைதன்னியமே தான் என்றும், மற்றை முப்பத்தைந்தும் தான் அல்ல என்றும் தெளிந்த விவேகியானவன், அகங்காரக் கிரந்தி அற்றபடியினால் இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும் நான் செய்யவில்லை என்றும், இந்த இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை என்றும், திடப்படத்தேறி மயக்க மற்று இருக்கின்றபடியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கர்மம் இல்லாதபடியினால், சனன மரணாதி சம்சாரம் இல்லாமல், முத்தனாய்ப் பிரம மாத்திரமாகவே இருப்பன். இவனைச் சீவன் முத்தன் என்றும், திடப் பிரக்ஞன் என்றும், அதிவர்ணாச்சிரமி என்றும், குணாதீதன் என்றும், பகவற்பத்தன் என்றும், பிராமணன் என்றும் வாசிட்டம் முதலிய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோட்சம் அடையக் கடவர்.

**நாநா சீவ வாதக் கட்டளை முற்றிற்று**

திருவாமாத்தூர்

## ஸ்ரீ திருவேங்கட நாதர்

அருளிச்செய்த

# கீதாசாரத் தாலாட்டு

# முகவுரை

தொண்டை நாட்டில் மாதைப் பதியின் மன்னனாக விளங்கிய திருவேங்கட நாதர் என்னும் மறையோர் இந்நூலாசிரியர் ஆவார்.

இவருக்கு அறிவிலும் அழகிலும் சிறந்த இரு புதல்விகள் இருந்தனர். இவர்களுள் ஒருத்திக்கு மகப்பேறு வாய்க்கப் பெறாமையால் மனம் வருந்தி ஏங்கித் தவித்தனள். அன்பு மகளின் ஏக்கம் காணச் சகியாத திருவேங்கட நாதர், அழகிய கண்ணன் பொம்மை ஒன்றைக் கொடுத்து, "இதனை தொட்டிலில் இட்டு, அருமை மைந்தனாகவே கருதித் தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டி மகிழ்ச்சி பெறுக" என ஆசி கூறினார். தாலாட்டும் பொருட்டு பகவத் கீதையின் ஞான யோகத்தின் சாரமான தத்துவ உண்மைகளைத் திரட்டித் தாலாட்டுப் பிரபந்தமாகக் கூறினதால் இது கீதா சாரத் தாலாட்டு எனப் பெயர் பெற்றது. அம்மாது நல்லாள் தந்தையின் அருள் வாக்கின்படி பாலகிருஷ்ணனைத் தொட்டிலில் இட்டுச் சீராட்டித் தாலாட்டி வர சில ஆண்டுகளில் சற்புத்திரப் பேறு வாய்த்து அளவிலா ஆனந்தம் அடைந்தனள் என்பது வரலாறு.

இத்தாலாட்டு தத்துவ ஞானங்கள் நிறைந்தது. அர்ஜுனன் சந்தேகமும், கிருஷ்ண பரமாத்மா சமாதானமும் கூறும் வாயிலாக இயற்றப்பட்டுள்ளது. ஆத்ம அநாத்ம பதார்த்தங்களின் இயல்புகளை கடினமின்றி இனிது அறியுமாறு செய்வது.

பந்த மோட்சங்களின் இயல்பு பற்றியும், ஒரு சிலர் முக்தர்களாயும், ஒருசிலர் பெத்தர்களாயும் இருப்பது எங்ஙனம் பொருந்தும் என்பது பற்றியும், சடம் ஆன தேகம் எவ்வாறு கர்மத்தைச் செய்யும், அக்கர்ம பலனை எவ்வாறு அனுபவிக்கும் என்பது பற்றியும், ஆன பல ஐயங்கள் குறித்து, மிக ஆழ்ந்த கருத்துக்களை தெளிவாகக் கூறுகின்றது. தேகம், இந்திரியம் முதலிய அநாத்ம வஸ்துக்களை இது நான் அன்று என்று போக்குதற்குரிய நல் விவேகத்தினை எளிதில் உண்டுபண்ணுவது. புத்தி கூர்மை இன்றியவர்களும் ஆத்ம தத்துவத்தினை உணருமாறு எளிதாகக் கூறுவது, இந்நூல்.

உ

சிவமயம்

# கீதாசாரத் தாலாட்டு

## சிறப்புப் பாயிரம்

ஆக்கியோன் பெயர், நூல் வந்த வழி, நூற்பெயர், நூற்பயன், நூற்பொருள், கேட்போர் தன்மை என்னும் ஆறினையும் கூறுகின்றார்.

**மாதையர்கோன் வேதநவில் வாய்வேங் கடநாதன்**
**காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணனருள் – கீதைக்**
**கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாரும்**
**கருத்துயர்தீர்ந்(து) எய்தக் கதி.**

திருவாமாத்தூரில் சிறப்புற வாழ்ந்த வேத விற்பன்னரான வேங்கடநாதன் என்பவர் அர்ஜுனனுக்கு கண்ணபிரான் அருளிய பகவத் கீதை என்ற நூலை விவரமாக எடுத்துச் சொன்னார். உயர்ந்த கருத்துக்களைத் தாலாட்டு வடிவமாக அமைத்து உரைத்திருக்கிறார், வேங்கடநாதன் என்ற கவி. இதைப் படிப்பவர்கள் மீண்டும் பிறவி எடுக்கமாட்டார்கள்.

## காப்பு

**ஐவகைப் பொருளும் நான்கு கரணமும் குணங்கள் மூன்றும்**
**செய்வினை இரண்டும் ஒன்றி யாவரும் திகைப்ப நின்ற**
**பொய் இருள் அகல ஞானப் பொருள் கதிர் விரித்தபுத்தேள்**
**கைவளர் ஆழி செங்கண் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.**

ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி ஆகிய ஐந்து பூதங்களும்; வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் என்ற ஐந்து வாயுக்களும்; வாக்கு, பாணி, பாதம், பாயுறு, உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்கள் ஐந்தும்; சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, கிராணம் என்ற ஞானேந்திரியங்கள் ஐந்தும்; சத்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து விஷயங்களும் ஐவகைப் பொருள்கள்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக்கரணங்கள் நான்கும்; சத்துவம், ரஜஸு, தமஸு ஆகிய குணங்கள் மூன்றும்; நல்வினை, தீவினை ஆகிய இவையாவும் ஒன்றி நான் எனது என்ற அகம்பாவத்தில்

தோய்ந்து மயங்கி அனைவரும் திகைத்து நிற்கின்றனர். ஞானசூரியனாகக் கையில் சுதர்சனம் என்ற சக்கரத்தை ஏந்தி நிற்கும் செந்தாமரைக் கண்ணனை மனதினுள் வைத்து தியானம் செய்து அஞ்ஞான இருள் நீக்கப் பெறுவோம்.

## நூல்

1. **சீர்ஆரும் பரமார்த்த தெரிசனத்தை அருள்செய்யப்**
**பேர்ஆரும் தேசிகனாய்ப் பெருமானே வந்தவரோ.**

சிறப்புடைய ஆத்ம தரிசனத்தை அருச்சுனன் காணுமாறு அருள் செய்ய ஆசிரியனாக இங்கு எழுந்தருளி வந்தவர் நீர்தானோ.

2. **திருத்தேரில் சாரதியாய்ச் சேர்ந்துஇருந்தும் கீதையினால்**
**அருச்சுனற்கு மெய்ஞ்ஞானம் அனைத்தும்*உரை செய்தவரோ.**

சிறந்ததொரு தேர்ப்* பாகனாய் இருந்து கீதை என்னும் உபதேச உரைகளால் அருச்சுனனுக்கு மெய்யறிவையும் அதற்குத் தொடர்பான எல்லாவற்றையும் உரைத்தருளிய கண்ணபிரான் நீர்தானோ.

3. **செஞ்சமரில் பந்துசனம் சேதம்வரும் என்றுஇரங்கி**
**அஞ்சினவன் பயம்தீர்த்தே அமர்செய்யச் சொன்னவரோ.**

நேர்மையான அறப் போரில், (தர்ம யுத்தத்தில்) உறவினர்க்கு நாசம் வருமே எனப் பரிதவித்து அஞ்சிய அருச்சுனனின் அச்சத்தைத் தம் உபதேசத்தால் நீக்கிப் போர் செய்ய வழி சொன்னவர்.

4. **சுற்றம்அறில் சோகம்எனச் சொல்லினைச்சற்று அறிந்தவன்போல்**
**கற்றுஉணர்ந்த பேர்அதனால் கலங்கார்காண் என்றவரோ.**

“உறவினரும் பிறரும் அழிந்து போனால் எனக்குத் துக்கம் வரும் என்பதை இப்போதுதான் உணர்ந்தவனைப் போல் கூறிய அருச்சுனா! சாத்திரங்களை நன்கு

---

* *அனைத்தும் : கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம்.*

* *அக்னி பகவானால் அருச்சுனனுக்கு அளிக்கப்பட்ட தேரில் பார்த்த சாரதியாய் இருந்து வழிகாட்டினார்.*

குருவின்பால் கற்றுணர்ந்த ஞானிகள், அதற்காகக் கலங்கிடார்" என உரைத்த கண்ணபிரான்.

5. **கலங்காரோ இறப்புவரில் கற்றுஉணர்ந்த பேரேனும்**
**மலங்காமல் நான்இருக்கும் வகைஉரையும் எனவினவ.**

அருச்சுனன் வினா – குரு வழியாகச் சாத்திரங்களை முறையாகக் கேட்டு உணர்ந்தவர் ஞானிகளாய் இருந்தாலும் சுற்றத்தினர்க்கோ, தனக்கோ, மரணம் வரும்போது கலங்க மாட்டார்களா? அப்படி நானும் மனம் சிதறாமல் இருக்கும் முறைகளை அடியவனுக்கு உரைத்தருள்க.

6. **நீயும்நா னும்புவிமேல் நிருபர்களும் மெய்உணர்வால்**
**ஆயும்கால் பிறந்துஇறப்பது ஆர்க்கும்இலை என்றவரோ.**

கண்ணனின் விடை – உண்மையினை ஆராய்ந்து பார்க்கும் பொழுது அருச்சுனனாகிய நீயும், இறைவனாகிய நானும், இவ்வுலகில் உள்ள முடி மன்னர்களும், பிறரும் பிறத்தல் இறத்தல் இரண்டுமே இல்லாதவர்கள்.

7. **ஈங்குளவர்க்கும் பிறந்துஇறப்பது இல்லைஎன்றீர் இவ்வுலகில்**
**நீங்குபவம் ஆர்க்குஇதனை நிச்சயமாய்ச் சொல்லும்என.**

அருச்சுனன் வினா – இவ்வுலகில் ஜனனம் மரணம் இரண்டுமே யாருக்கும் கிடையாது என உரைத்தீர். அவ்வாறாயின் இங்கு பிறத்தலும் இறத்தலும் எவர்க்கு என்பதனை உள்ளபடி உறுதியாகச் சொல்லும்.

8. **இத்தரையில் பிறந்துஇறப்பது எடுத்தஉடற்கு அடுத்தபொறி**
**நித்தியம்ஆ கியஆன்மா நின்சொரூபம் என்றவரோ.**

கண்ணனின் விடை – இத்தரையில் பிறந்து இறப்பது முன் பிறவிக் கர்மத்தின் படி உடலுக்கு நேரிடுகிறது. அப்படியானால் உன் தன்மை யாது என நீ கேட்பாயானால் உன் வடிவம் அழிவில்லாத ஆத்மாவின் வடிவமேயாகும்.

**9. அங்கம்உயிர் இந்தியம்நான் அன்றிவேறு எனைக்காணேன்
இங்குயான் வேறுஉண்டேல் எனக்குஅறியப் புகலும்என.**

அருச்சுனன் வினா – நான் என்னும் பொருளில் அமைந்த என் வடிவம் வெளிக் காணும் உடல், உயிர், இந்திரியங்கள், உடற் கருவிகள் ஆகிய இவைகளேயன்றி, என் வடிவாக நீர் கூறிய ஆத்மாவை நான் இங்கு காணேன். இங்கு 'நான்' என்ற சொல்லுக்குப் பொருளான ஆத்ம வடிவம் வேறு இருக்குமானால் எனக்குத் தெரியும்படி உரைத்தருள்க!

**10. மெய்உயிர்இந் தியங்கள்• அல்லால் வேறுஅறியேன் என்றவனைப்
பையஅவை யால்அறியப் படானும்நீ என்றவரோ.**

கண்ணனின் விடை – கண்ணாற் காணப்படும் இவ்வுடல் உயிர் இந்திரியங்கள் ஆகியவைகளாக நான் விளங்குகின்றேன். இவற்றினின்றும் வேறாக என் வடிவினை நான் அறியவில்லை, என்று சொன்ன அருச்சுனனை நோக்கிக் "குழந்தாய்! உயிர், இந்திரியம், உடல் இவற்றால் உணரப் படாதவனும் நீயே" என்றார்.

**11. தேகம்வேறு ஆகில்அதைச் சேர்ந்ததுஇவண் ஏதுஎனவே
சோகமே விளைகருமத் தொடர்ச்சியினால் என்றவரோ.**

அருச்சுனன் வினா – இவ்வுடல் என் வடிவிற்கு அந்நியப் பட்டதென்றால் இவ்வுடலினை இங்கே அவ்வாத்மா அடைந்ததெப்படி?

கண்ணனின் விடை – பிறப்பு, இறப்பு ஆகிய இவற்றினால் உண்டாகும் துன்பம் முற்பிறவிப் பாவ புண்ணியச் செயல்களின் தொடர்பினால் வருபவை.

**12. தேகம்எடா முன்கருமச் செயல்வரும்ஆ(று) ஏதுஎனவே
ஏகமா மரமும்வித்தும் எனும்முறைபோல் என்றவரோ.**

அருச்சுனனின் வினா – முன்பிறவியில் செய்த வினைகள் உடல் எடுப்பதற்குக் காரணம் என்றால் உடல் எடுப்பதற்கு முன்னால் புண்ணிய பாவச் செயல் எவ்வாறு வருகிறது?

---

*• இந்தியங்கள் = ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து.*

கண்ணனின் விடை – மரத்தினால் விதை உண்டாகிறது. அவ்விதையினால் மரம் உண்டாகிறது. விதை காரணம். மரம் காரியம். இது முடிவின்றித் தொடரும் செயல். உடல் உண்டாவதற்கு முன் வினையும், அச்செயலுக்கு உண்டான உடலும் காரண காரியத்துடன் முடிவின்றித் தொடர்ந்து கொண்டே இருக்கும்.

**13.** **காயமும்தா னும்பிறிதேல் கன்மம்எவர் செய்ததுஎனத்**
**தீயஉடற்(கு) அலதுகன்மச் செயல்தனக்(கு) ஏதுஎன்றவரோ.**

அருச்சுனன் வினா – இவ்வுடலும் ஆன்மாவும் வெவ்வேறாயின் நல்ல கருமம் தீயகருமம் இவைகளைச் செய்தவர் யாவர்?

கண்ணனின் விடை – அத்தீவினை, நல்வினையாகிய தொழில்கள் குற்றம் உடைய உடலுக்கேயன்றி ஆன்மாவாகிய தனக்கு எப்படி வரும்? அவ்வாறு வருவது இல்லை.

**14.** **படர்கருமம் உடல்செய்யில் பலம்உறுவது ஆர்க்குஎனவே**
**அடர்பலமும் உடற்கேயாம் அறிவார்க்கு ஏதுஎன்றவரோ.**

அருச்சுனன் வினா – நன்மை தீமைகளைத் தரும் செயல்களை உடலே செய்யுமானால் அவற்றின் பாவ புண்ணியப் பலன்களை அடைதல் எவர்க்கு உரியது?

கண்ணனின் விடை – புண்ணிய பாவப் பலன்கள் உடலுக்கேயாம். அறிவு வடிவமாக இருக்கும் ஆன்மாவிற்கு எப்படி வரும்?

**15.** **வெய்யவினை உடற்குஎன்றால் மெய்இங்கே விழஆன்மா**
**ஐயம்அற நரகசொர்க்கம் அனுபவிப்பது ஏதுஎனவே.**

அருச்சுனனின் வினா – கொடிய வினைகளால் உண்டாகும் பலன்கள் உடலுக்கே உரியது என்று கூறினால் என்னால் காணப்படும் உடல் இவ்வுலகில் இறந்து பிணமாக விழுந்து போகத் தனித்து நின்ற ஆன்மா நரகத்தில் துன்பத்தையும் சொர்க்கத்தில் இன்பத்தையும் அனுபவிப்பது என்பது எப்படி?

**16.** **அனுபவமே இலைஅதுவீண் ஆரோபி தநிகழ்த்தில்**
**தனுகரணச் செயல்தனதாச் சார்வதுபோல் என்றவரோ.**

கண்ணனின் விடை – நரக சொர்க்கம் அனுபவிப்பதென்பது ஆராய்ந்து காணுங்கால் அது அனுபவமே இல்லை, பருவுடலுக்கும் அகக் கருவிக்குமான

தொழில்களை தன்னுடைய தொழில்களாகக் கருதுவது போல அது ஒரு பயனற்ற மாயத் தோற்றம்.

(நரகத்தில் கஷ்டப்படுவது, சொர்க்கத்தில் இன்பம் அனுபவிப்பது என்பதெல்லாம் கூட மாயையே என்பது கருத்து).

**17. மற்றுஉடலின் செய்கைதன்மேல் வருமயக்கம் ஏதுஎனவே**
**முற்றுணர்வு ஒன்றுஇல்லாத மோகம்என்று சொன்னவரோ.**

அருச்சுனன் வினா – பருத்தல், இளைத்தல், பார்த்தல், நடத்தல் முதலிய உடலின் செய்கைகளை ஆன்மா மீது வந்து, பார்த்தேன், நடந்தேன் எனத் தோன்றும் மயக்கம் எப்படி வந்தது?

கண்ணனின் விடை – முழுமையான அறிவைப் பெறாமல் தத்துவ ஞானம் இல்லாத மயக்கத்தால் தோன்றுகிறது.

**18. அறிவுதே கம்தனக்கோ ஆன்மாவிற் கோஎனவே**
**பிறிவுசெயில் அசித்துஉடலம் பிரமம்அறிவு என்றவரோ.**

அருச்சுனனின் வினா – அறிவு உடலுக்கா? அல்லது ஆத்மாவிற்கா?

கண்ணனின் விடை – உடலையும் ஆத்மாவையும் பிரித்துப் பார்க்கும்போது உடல் அறிவற்றது. ஆன்மாவாகிய பிரம்மமே அறிவு வடிவானது.

**19. தேகம்அசித்து ஆகில்இந்தச் செயல்வருவது ஏதுஎனவே**
**ஏகபரஞ் சோதியின்முன் இருக்கையினால் என்றவரோ.**

அருச்சுனன் வினா – உடல் அறிவற்றது என்றால் அதற்கு இயங்குதல் முதலான தொழில்கள் வந்து சேர்தல் எப்படி?

கண்ணனின் விடை – சேதனம்* ஆகியஒரே பரம்பொருளின் சன்னிதானத்தில் (பிரம்மப் பிரகாசத்தில்) உடல் இருப்பதால் இந்திரியங்களின் மூலம் அதற்குச் செயல்கள் உண்டு.

**20. இருக்கினும்அ சேதனத்திற்கு இச்செயல்உண் டோஎனவே**
**உருக்குபடாக் காந்தம்முன்னில் ஊசிநிகர் என்றவரோ.**

---

* *சேதனம் – அறிவு வடிவம்.*

அருச்சுனன் வினா – அவ்வாறு உணரும் தன்மை பெற்று இருப்பினும் கல் போன்று ஜடமான அறிவற்ற உடலுக்கு வளர்தல் (பருத்தல்) பார்த்தல் ஆகிய இத்தொழில்கள் உள்ளனவோ?

கண்ணனின் விடை – காந்தத்தின் முன்னிலையில் அசையாத இரும்பு ஊசிக்கு அசைவுகள் உண்டாவது போல அறிவற்ற ஜடமான உடலுக்கும் வளர்தல், பருத்தல் ஆகிய செயல்கள் பரம்பொருளின் சன்னிதானத்தில் உண்டாம்.

**21. சொன்னசெயல் உடற்குஆனால் சுகதுக்கம் யார்க்குளனவே**
**அன்னசுக துக்கமும்தான் அவ்உடற்கே என்றவரோ.**

அருச்சுனன் வினா – முற் கூறிய நன்மை தீமை ஆகிய தொழில்கள் உடலுக்கு என்றால் அதனால் வரும் பயனாகிய இன்பமும் துன்பமும் எவருக்கு?

கண்ணனின் விடை – அவ்வாறுவரும் இன்பமும் துன்பமும் கூட உடலுக்கே.

**22. சேதனமாம் ஆன்மாவைச் சேராத துக்கசுகம்**
**ஓதுசடம் ஆம்உடலை உற்றிடுமோ சொல்லும்என.**

அருச்சுனனின் வினா – ஞான வடிவான ஆன்மாவை பாதிக்காத துன்பமும் இன்பமும் போகத்திற்கு இடமான அறிவற்ற உடலைச் சேருமா? அடியேனுக்குச் சொல்லியருள்க.

**23. பூதம்ஐந்தோடு ஐந்துஉயிர்கள் புலன்கள்பத்து மனம்முதல்நான்கு**
**ஈதுஇருமெய் இதில்மனத்துக்கு இன்பதுன்பம் என்றவரோ.**

கண்ணனின் விடை – ஐந்து பூதங்களுடன், ஐந்து பிராணன்களுடன், புலன்கள் பத்தும், மனம் முதல் நான்கும், ஆகிய 24 தத்துவங்களே பருவுடலும்* நுண்ணுடலும்* ஆகிய இரு சரீரங்கள். இதில் மனத்திற்குத்தான் இன்ப துன்பங்கள் பொருந்தும்.

**24. இந்தஇரு வகைத்தனுவிற்கு ஏது*ஏது எனவினவ**
**முந்தியகா ரணம்அதனால் மூன்றுதனு என்றவரோ.**

---

* பருவுடல்– ஸ்தூல சரீரம், நுண்ணுடல்–சூக்ஷ்ம சரீரம்.

* ஏது - ஹேது - மூலம்.

அருச்சுனன் வினா – பருவுடல் நுண்ணுடல் என இருவிதமாகக்கூறப்படும் இவ்வுடலுக்குக் காரணம் யாது?

கண்ணனின் விடை – இவற்றிற்கு முற்பட்ட காரணம் அஞ்ஞானம். அந்த அஞ்ஞானத்தால் வந்தது இந்த உடல் ஆகும். எனவே இது காரண சரீரம். இக் காரண சரீரத்தோடு மேலே கூறிய இரண்டுடலும் சேர மூன்று உடல்களாக அவை கருதப்படும்.

**25. மனம்அறியும் துக்கசுக வரவுஎன்றீர் அம்மனமும்**
**வினவில்அசே தனம்அலவோ விரித்துஎனக்கு விளம்பும்என.**

அருச்சுனன் வினா – இன்ப துன்பங்களின் வரவினை மனமானது உணரும் எனக் கூறியருள் செய்தீர். ஆராயும் இடத்து அந்த மனமும் அறிவற்றது அல்லவோ? இதனை நான் அறிந்து கொள்வது எவ்வாறு என்பதனை எனக்கு விரித்துரைக்க வேண்டும்.

**26. அம்மனத்தில் ஆன்மா அபேதம்போல் தோன்றுதலால்**
**விம்முதுக்க சுகத்தைமனம் மேவும்என்று சொன்னவரோ.**

கண்ணனின் விடை – முன்னே சொன்ன அந்த மனத்தின் கண் ஆன்மா ஒன்று பட்டது போலத் தோன்றுதலால் மிகுதியான இன்ப துன்பங்களை மனமும் அடையும். (மனமும் ஆன்மாவும் ஒன்று என்று நாம் கருதுவதால் “நான் துக்க சுகங்களை அனுபவிக்கிறேன்” என்று மயங்குகிறோம்)

**27. அந்தமனோ துக்கசுகம் அதனிடத்து நில்லாமல்**
**வந்துஇலங்கும் ஆன்மாவை மருவியதுஎன் சொல்லும்என.**

அருச்சுனன் வினா – மனம் அனுபவிக்கின்ற இன்பதுன்பங்களை மனத்தோடு நில்லாமல் அறிவு வடிவான ஆன்மாவையும் பாதிக்கின்றதே, அது ஏன்?

**28. வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டியின்ஊடு**
**உய்யபுனல் ஊடுவந்து அங்கு ஒன்றுதல்போல் என்றவரோ.**

கண்ணனின் விடை – வெப்பம் மிகுந்த தீயின் கனல்படும்படியாக அதன்மேல் வைக்கப்பட்டச் சட்டியிலே ஊற்றிய தண்ணீரில் அத்தீயின் சூடு ஏறுவது போல, இன்ப துன்பங்கள் ஆன்மாவை பாதிக்கின்றன. (உள் மயக்கத்தினால்)

29. சித்துஆகும் ஆன்மாவும் செடம்ஆகும் சித்தமும்தான்
ஒத்துஆங்கு இரண்டும்ஒன்றுஆய் உற்றவகை சாற்றும்என.

அருச்சுனன் வினா – ஞான வடிவான ஆன்மாவும், அறிவற்றதாகிய மனமும் ஆகிய இரு பொருள்களும் வேற்றுமையின்றி ஒன்றானது போலப் பொருந்திய விதம் கூறியருள்க.

30. வல்இரும்பு கனலுடனே மருவியது போல்மனமும்
ஒல்லையில்ஆன் மாஉடனே உற்றதுகாண் என்றவரோ.

கண்ணனின் விடை – கடினமான இரும்பு, சிவந்த ஒளியுடைய தீயில் இருக்கையில் அத்தீயின் ஒளியைப் பெற்று விளங்குதல் போல, அறிவற்ற மனமும் சுய ஒளியோடு திகழும் ஆன்மாவுடன் ஒன்றானதுபோல் தொன்று தொட்டுப் பொருந்தியது.

31. உற்றதுஎத னால்எனவே உள்ளம்அவி வேகம்உறப்
பற்றியதன் மேலும்அதன் பண்புவந்தது என்றவரோ.

அருச்சுனன் வினா – மனத்தினைச் சேர்ந்த சுக துக்கங்களை ஆன்மாவும் அனுபவிப்பது போலத் தோன்றுவது எதனால்?

கண்ணனின் விடை – அவிவேகத்தினால் ஆன்மாவினிடம் மனத்தின் சுக துக்க அனுபவம் வந்ததுபோல் தோன்றியது.

32. அடுத்தகுணம் போமோபின் ஆன்மாவை விட்டுஎனவே
எடுத்தசெம்பூ நிறம்படிகத்து ஏறுதல்போல் என்றவரோ.

அருச்சுனன் வினா – ஆன்மாவினை அவ்விதம் கட்டுப் படுத்திய இன்ப துன்பங்களாகிய குணங்கள் ஆன்மாவை விட்டு நீங்குமா?

கண்ணனின் விடை – சிவப்பான பூவின் நிறம், அதன்முன் இருக்கும் வெண்மையான படிகத்தின் மீது படிந்து படிகமும் சிவப்பாகத் தோன்றும். படிகத்தின் முன்னுள்ள செம்பூ நீங்கியதும் படிகத்தின் மேலுள்ள சிவந்த நிறம் நீங்குவது போல் ஆன்மாவுடன் தொடர்புற்ற இன்ப துன்பங்கள் விவேகம் அடைந்த காலத்துத் தானாகவே நீங்கும்.

33. சுத்தபடி கம்போல்சொ ரூபமாய்த் தான்இருக்க
மெத்தவும்ஆ சாமலினம் மேவியதுஎன் சொல்லும்என.

அருச்சுனன் வினா – களங்கமில்லாத பளிங்கு போன்ற ஆன்மா எப்பொழுதும் ஒரே தன்மையுடையதாய் இருக்க, ஆசை என்ற களங்கம் ஆன்மாவை மிகுதியும் பாதிப்பது எதனால்?

34. அநாதியாம் வாசனையால் அடைந்ததுஆ சாமலினம்
மனோபந்தம் இருக்கில்முத்தி வாராதுஎன்று உரைத்தவரோ.

கண்ணனின் விடை – தொன்று தொட்டு வரும் பழைய கருமங்களின் வாசனையால் மனமானது ஆசையாகிய களங்கத்தை அடைந்தது. மனத்தின் கண் ஆசை பாசம் இன்பம் துன்பம் இவை இருக்குமாயின் வீடு பேறு கிடைக்காது.

35. பந்தம்எது முத்திஎது பகுத்துரைக்க வேண்டும்என்தன்
சிந்தைதெ ளியஎன்று திருத்தாளி னைவணங்க.

அருச்சுனன் வினா – பந்தம் என்பது என்ன? வீடுபேறு என்பது யாது? என் சித்தம் தெளிவடையும் பொருட்டு இவற்றைப் பிரித்து உரைத்தருள வேண்டும், என்று கூறி கண்ணபிரானின் திருப்பாதங்களை வணங்கினான்.

36. தேகாதி தான்எனவே சேர்அபிமா னங்கள்பந்தம்
ஆகாத மானம்விடில் அரியமுத்தி என்றவரோ.

கண்ணனின் விடை – உடல் முதலியவற்றைத் தன் வடிவம் என நம்புகின்ற அபிமானமே நான், எனது என வரும் (பற்றுக்களுமே) பந்தமாம். அபிமானம் நீங்கினால் அதுவே அரிதான வீடு பேறு ஆகும்.

37. அபிமானம் வரும்வகையும் ஆங்குஅதனைத் தீர்வகையும்
தபியாமல் நான்அறியத் தயவுஆகக் கூறும்என.

அருச்சுனனின் வினா – முற் கூறிய நான் எனது என்னும் பற்றினால் உண்டாகும் அபிமானமும், அதனால் ஏற்படும் பந்தம் வருகின்ற தன்மையையும், அப்பற்றினை நீக்குகின்ற தன்மையையும் அடியேன் எளிதாக அறிய அருள் கூர்ந்து கூறுக.

**38. மறந்திடும்அஞ் ஞானத்தால் மானம்*வந்தது அஞ்ஞானம்**
**இறந்துவிடின் மானமும்போம் என்னஉரை செய்தவரோ.**

கண்ணனின் விடை – ஆத்ம சொரூபமான தன் வடிவினை மறதி என்னும் அறிவின்மையால் உடலில் நான் என்னும் புத்தி வந்து சேர்ந்தது. அவ்வறிவின்மை நீங்குமாயின் நான் என்னும் அபிமானமும் உலகப் பற்றும் நீங்கிவிடும்.

**39. அந்தமுறை அஞ்ஞானம் அணுகுவதும் போவதுவும்**
**சந்தயம்இல் லாதுஅறியத் தயவுஆகக் கூறும்என.**

அருச்சுனன் வினா – அஞ்ஞானம் வருகின்ற வகையும் அது தீர்கின்ற வகையும் எப்படி என்று தெளிவாக நான் உணரும் பொருட்டுத் தயவு செய்து கூறுக.

**40. அஞ்ஞானம் வந்தது அனாதிஅது சொல்வதுஅல்ல**
**மெய்ஞ்ஞானத் தாலே விடும்என்று உரைத்தவரோ.**

கண்ணனின் விடை – அவ்வறியாமை அநாதியானது. அவ்வறிவின்மை இடையில் வந்ததாகச் சொல்ல முடியாது. குருவருளால் கிடைத்த தத்துவ ஞானத்தினாலேயே அஞ்ஞானம் விட்டுப் போகும். (ஒளிவந்தால் இருள் நீங்குவது போல).

**41. இரவிஎதிர் அடுத்துவந்த இருள்போல அஞ்ஞானம்**
**வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை ஏதுஎனவே.**

அருச்சுனன் வினா – சூரியன் முன்னர் இருள் வந்துள்ளது என்பது பொருந்தாது. இருள் வடிவமான அறியாமை அறிவு வடிவமான ஆன்மாவை எப்படி மறைக்கும்? அது எப்படிப் பொருந்தும்?

**42. அந்தஅறி வுவந்தால் அஞ்ஞானம் இல்லைஅப்பால்**
**சந்ததமும் ஆனந்த சாகரம்காண் என்றவரோ.**

கண்ணனின் விடை – அறிவு வடிவமாக இருக்கும் (பிரம்ம சொரூபமான) ஆன்மாவில் அறிவின்மை என்னும் இருள் ஒரு போதும் சேர்தல் பொருந்தாது. இந்த

---

* *மானம் – அபிமானம்.*

அறிவு உண்டானபின் அறியாமை என்பது இல்லை. இவ்விதமான அறிவு உறுதியாய்த் தோன்றியபின் எப்போதும் நீ இன்பக் கடல் வடிவம் என்று அறிவாய்.

**43. வேதாந்தத் தால்குருவால் மெய்ஞ்ஞானம் வந்தவுடன்
தீதான துக்கசுகம் தீராதது ஏதெனவே.**

அருச்சுனன் வினா – குருவின் அருளால் கிடைத்த வேதாந்தப் பயிற்சியால்• உண்மையான ஆத்ம அறிவு வந்த அந்தப் பொழுதிலேயே கொடிய இன்ப துன்பங்கள் தீராமைக்கு என்ன காரணம்?

**44. பற்றுஅறுமோ துக்கசுகம் பரோட்சஞா• னத்தாலே
அற்றம்ஆம் அவ்இரண்டும் அபரோட்சத்து• என்றவரோ.**

கண்ணனின் விடை – பரோட்ச ஞானம் என்ற தத்துவ அறிவினால் அறிவின்மை நீங்காதபோது அதனால் உண்டாகும் இன்ப துன்பங்களின் பற்று நீங்குமோ? (ஆகாது என்பது கருத்து) எந்த அறிவால் நீங்கும் எனக் கேட்பின், அனுபவ அறிவினால் (அபரோட்ச ஞானத்தால்) அறிவின்மை நீங்கி இன்ப துன்பங்களாகிய இரண்டும் நீங்கும்.

**45. பரோட்சம்அப ரோட்சம்எது பகுத்துஉரைக்க வேண்டும்என்தன்
திரோதம்ஆம் புத்திநன்றாத் தெளியும்ப டிக்குஎனவே.**

அருச்சுனன் வினா – பரோட்ச அறிவு எது? அபரோட்சம் எது? மாயை என்ற திரையினால் மறைக்கப்பட்டிருக்கும் புத்தியுடைய எனக்குத் தெளிவுண்டாகும்படி உரைத்தருள்க.

**46. பகர்ந்தசத்த ஞானம்ப ரோட்சம்அ னுபவத்தால்
அகம்பிரமம் எனும்ஞானம் அபரோட்சம் என்றவரோ.**

கண்ணனின் விடை – கேள்வியினால் (குருமுகமாக) உணரப்படும் அறிவு முன்னர்க் கூறிய பரோட்ச ஞானம் ஆகும். பயிற்சியின் முதிர்வால் நானே பிரம்ம சொரூபம் என்று உணரும் அறிவே அபரோட்ச ஞானம்.

---

- *சிரவணம் மனனம் நிதித்யாசனம் என்ற பயிற்சிகள்.*
- *பரோட்ச ஞானம் = பிரம்மம் இருக்கிறது என்ற அறிவுத்தெளிவு.*
- *அபரோட்ச ஞானம் = பிரம்மமே நான் என்று சந்தேகமறத் தெளிந்து உணருதல்.*

**47.** **தான் பிரமம் என்றறிந்தும் தனுவைத்தான் என்ற புத்தி**
**ஏன் போகவில்லை அதை எனக்கறியப் புகலும்என.**

அருச்சுனன் வினா – கண்ணா! நானே பிரம்மம் என்ற அபரோட்ச ஞானம் வந்த பிறகும் 'என்னுடைய உடல் தான் நான்' என்ற எண்ணம் ஏன் போகவில்லை? அதை எனக்குப் புரியும்படி கூறுங்கள்.

**48.** **கேள்வியினால் மனனத்தால் கிளர்ந்தயோ கங்களினால்**
**ஆள்பிரமத்து அனுபவம்வந்து அதுதீரும் என்றவரோ.**

கண்ணனின் விடை – கேள்வியாலும் மனனத்தாலும், தொடர்ந்து செய்யும் சாதனைகளாலும் பிரம்மத்தை அறியும் அனுபவம் உண்டாகும். அப்போது சரீரமே 'நான்' என்ற உணர்வு நீங்கும்.

(ஞானாசிரியனை அடைந்து குருமுகமாகச் சித்த சுத்தியுடன் நான்யார் என்ற கேள்விக்குத் தெளிவான விளக்கம் கேட்பது சிரவணம்.

மனத்தால் குரு முகமாகக் கேட்டதைத் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்துத் தெளிவடைதல் மனனம்.

ஆத்மாவுக்குப் பயனில்லாத விஷயங்களைத் தடுத்து தொடர்ச்சியாக 'அஹம் பிரம்மம்' என்று சிந்தித்தல் நிதித்தியாசனம்.)

**49.** **ஆதிஆம் சிற்சொரூபம் ஆகாத தான்இனிமேல்**
**சோதிமனன் ஆதியினால் சொரூபம்ஆ மோஎனவே.**

அருச்சுனன் வினா – ஆத்மாவாகிய தான் முன்னரே அறிவு வடிவான பிரம்ம சொரூபமாக இல்லாதிருந்து தற்போது கடைபிடிக்கும் சிரவண, மனன, நிதித்தியாசனங்களினால் அறிவு வடிவான பிரம்ம சொரூபம் ஆகுவனோ?

**50.** **எப்போதும் சின்மயம்தான் எனல்மறந்து தேடுவது**
**செப்புமிடற்று அணிஇருக்கத் தேடுதல்போல் என்றவரோ.**

கண்ணனின் விடை – ஆன்மாவாகிய தான் முக்காலத்தும் ஞான வடிவமே என்பதனை மறந்து தேடுவது, தான் முன் அணிந்துள்ள அணி கழுத்தில் இருக்கும் போதே அதனை மறந்து அது தொலைந்து போய் விட்டதாக எண்ணித் தேடுவது போலாகும்.

51. **தேடியபின் தேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற்சொரூபம்**
**கூடுவனோ யான்என்கு றைதீரச் சொல்லும்என.**

அருச்சுனன் வினா – சிரவணம் மனனம் முதலிய பயிற்சிகளால் இந்த உடல்தான் நான் என்ற உணர்வு விட்டு நீங்கி ஞான வடிவினை நான் அடைவேனோ என்ற எனது சந்தேகம் தீர்த்தருள்வீராக.

52. **வந்தஉடல் வேறுஆயும் வாசனையால் தான்எனலால்**
**சந்தயம்என் தன்சொரூபம் தான் ஆதற்கு என்றவரோ.**

கண்ணனின் விடை – மானுடப் பிறவியில் வந்த சரீரம் பூர்வ ஜன்ம கர்ம வினைகளினால் தானே வந்தது? பழைய வாசனைகளின் தாக்கத்தால் உடலை "நான்" என்று நினைக்கிறாய். அது நீங்கிய உடனே உண்மையான ஆத்ம வடிவத்தை உணர்ந்து, ஆன்ம சொரூபமாகவே நிலை பெறுவாய் என்பதில் சந்தேகமே கிடையாது.

53. **தனுவைத்தான் எனும்பிரமை சத்தஞா னத்தில் அறாது**
**அனுபவமெய்ஞ் ஞானத்தால் அறும் வகைஏது உரையும்என.**

அருச்சுனன் வினா – உடலை ஆத்மா என்று கருதும் மயக்கம் கேள்வி அறிவினால் நீங்குவதில்லையே. அனுபவ வடிவான மெய்ஞானத்தை அறிந்தபிறகே அப்பிரமை நீங்குகின்ற வழிவகை யாது?

54. **விளக்குவிளக்கு எனும்அதனால் வெய்யஇருள் போய்விடுமோ**
**துளக்கம்இலா விளக்குஏற்றில் தொலையும்இருள் என்றவரோ.**

கண்ணனின் விடை – விளக்கு விளக்கு என்று பலமுறை சொல்வதாலேயே இருள் நீங்கி விடுமா? நீங்காது. அசைவில்லாத விளக்கு ஏற்றப்படும் போதுதான் இருள் நீங்கும்.

55. **நெடுங்காலம் ஆன்மாவை நீங்காத அஞ்ஞானம்**
**விடுங்காலம் எந்நாளோ மெய்ஞ்ஞானத் தால்எனவே.**

அருச்சுனன் வினா – நீண்ட நாட்களாக ஆத்மாவை விட்டு நீங்காது கூடவே இருந்த அறிவின்மையானது மெய்யறிவினால் நீங்குகின்ற காலம் எந்நாளோ?

56. **அந்தகா ரம்குகையில் ஆயிரம்நாள் இருந்தாலும்**
**செந்தீபம் கண்டவுடன் தீர்வதுபோல் என்றவரோ.**

கண்ணனின் விடை – குகையில் உள்ள இருள் நெடு நாளாக இருந்தாலும், சிவந்த சுடரைக் கண்ட போதே இருள் நீங்குவது போல் தத்துவ அறிவு உண்டானவுடன் அறிவின்மையும் நீங்கும்.

57. **கருமயோ கம்தவமே காரணமா நீங்காமல்**
**அருமையா ஞானம்வந்தோ அஞ்ஞானம் போம்எனவே.**

அருச்சுனன் வினா – அஞ்ஞானமானது யாகம் போன்ற புண்ணியச் செயல்களாலும் யோகம் தவம் இவற்றினாலும் நீங்காமல் அடைதற்கரிதான மெய்யறிவு உண்டான பின்தான் நீங்குமோ?

58. **குத்துவெட்டும் படைகளினால் கூடுமோ இருள்துரக்க**
**உத்தமம்ஆம் ரவிஉதித்தால் ஓடும்இருள் என்றவரோ.**

கண்ணனின் விடை – குத்தவும் வெட்டவும் பயன்படும் ஆயுதங்களால் இருளினை நீக்கிட முடியுமோ? முடியாது. உலகிற்கு எல்லா நன்மைகளையும் செய்விக்கும் சூரியன் உதயமானால் இருள் தானாகவே ஓடிவிடும்.

59. **அஞ்ஞான இருள்துரக்க அறியாத நல்லகன்மம்**
**மெய்ஞ்ஞாலம் தனைப்பரிக்கும் விதம்எவ்வாறு எனவினவ.**

அருச்சுனன் வினா – அஞ்ஞானம் என்ற இருளை நீக்குவதற்கு நல்ல கருமங்கள் உதவி செய்யாது என்றால் உண்மை என்று நான் நம்பிக்கொண்டிருக்கும் இந்த உலகத்தில் நான் செய்த நல்ல கருமங்களினால் எனக்கு ஏற்படும் பயன் யாவை?

60. **இந்திரசா லம்போல இவ்வுலகை நம்மிடத்தில்**
**தந்திரமாத் தோற்றுவித்தோம் சத்தியம்அல என்றவரோ.**

கண்ணனின் விடை – இந்திர சாலம் செய்யும் மந்திரவாதியின் வித்தையில் தோன்றிய பொருள்கள் எல்லாம் நிஜமான பொருள்களாகத் தெரிவது போல, நம்மிடத்தில், பொய்யான இவ்வுலகை சத்தியம் போலத் தோற்றமளிக்கச் செய்யும்படி விளையாட்டாக உண்டாக்கினோம். ஆதலின் இது உண்மையன்று பொய்யே.

**61.** **மித்தைஎனும் சகத்துநின்பால் விளங்குமோ எனவினவ**
**சுத்திதனி லேரசதம் தோன்றுதல்போல் என்றவரோ.**

அருச்சுனன் வினா – பொய் என்று அருளாளர் கூறும் இவ்வுலகம் பிரம்ம சொரூபமான உன்னிடத்துத் தோன்றுமோ?

கண்ணனின் விடை – கிளிஞ்சலிடத்தில் வெள்ளி* தோன்றுதல் போல் மெய்யே வடிவான நம்மிடத்தில் இப்பொய்யாகிய உலகம் உண்டாயிற்று.

**62.** **அயல்வெள்ளி சுத்தியின்மேல் ஆரோபி தம்கூடும்**
**இயல்உள்ள சகமும்முன்வேறு இருந்ததும்உண் டோஎனவே.**

அருச்சுனன் வினா – வெள்ளி என்ற பொருளை நான் அறிவேன். அதனால் கிளிஞ்சலின் பளபளப்பைக் கண்டு வெள்ளி என நினைக்கிறேன்.

ஆனால் இந்த உலகத்தை நான் அறியும் போது இதற்கு முன்னால் தாங்கள் சிருஷ்டித்த உலகம் வேறு ஒன்று இருந்ததா?

(வெள்ளியைத் தெரிந்த படியால் சிப்பியில் வெள்ளி தெரிந்தது. அதுபோல நான் மயங்குவதற்கு ஏற்கனவே பொய்ப் பிரபஞ்சம் ஒன்று இருந்ததா?)

**63.** **மனமயக்கம் பிடிக்கில்இல்லா வத்துவும்தோன் றிடும்அதுவோ**
**கனவில்விண்ணில் தான்பறக்கக் கண்டதுபோல் என்றவரோ.**

கண்ணனின் விடை – உள்ளம் மயக்கம் அடைந்தால் இல்லாத பொருளும் உள்ளது போல் தோன்றும். எப்படி என்றால் பறக்க முடியாதவன் தானே விண்ணில் பறப்பதாகக் கனவு கண்டது போல் ஆகும்.

**64.** **கனவுபோல்பிர பஞ்சம்என்றீர் கண்விழித்தால் கனவுபொய்யாம்**
**வினவுசகம் தினமும்மெய்யா விளங்குவதுஎன் சொல்லும்என.**

அருச்சுனன் வினா – கனவு பொய்யாவது போலவே இவ்வுலகமும் பொய் என்றீர். அந்தக் கனவுலகம் கண் விழித்தால் பொய்யாகி விடும். நான் கேட்கும் இவ்வுலகம் நாள்தோறும் சத்தியமாக விளங்குவதாகத் தோன்றுகிறதே! அதற்கு யாது காரணம்.

•

* *சிப்பியில் வெள்ளி கிடையாது. ஆனால் நாம் அதன் பளபளப்பைக் கண்டு வெள்ளி என்று மயங்குகிறோம்.*

**65.** **மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞானம் வரும்அளவும்**
**பொய்யாம்பின் கனவுஅதுபோல் போதம்வரில் என்றவரோ.**

கண்ணனின் விடை – தத்துவ ஞானம் வருகின்ற வரையும் இவ்வுலகம் சத்தியமாகத் தோன்றும். தத்துவ ஞானம் வந்தபின்னர் கனவில் காணும் உலகம் போல் கண்ணாற் காணும் உலகமும் பொய்யே என்பது விளங்கும்.

**66.** **முன்புகண்ட கனவு*பொய்யாம் முழிசாக்ரம்* போலஎன்றீர்**
**பின்புமுத்தித் தசைஅடைந்தும் பிரபஞ்சம்நிற்பது ஏதுஎனவே.**

அருச்சுனன் வினா – கண் விழித்துக் கொள்ளும் போது தோன்றும் விழிப்பு நிலையில் முன்பு கண்ட கனவு பொய்யாவது போல என்று அருள் செய்தீர். பின்னர் வீடு பேற்றினை அந்த ஞானத்தால் அடைந்த பின்னும் உலகம் முன்பு போலத் தோன்றிக் கொண்டு இருப்பதற்குக் காரணம் யாது? அதனால் சுகதுக்கம் உண்டாகுமா?

**67.** **தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம்* போல்வதுஅல்லால்**
**பரந்தசகம் காரியத்தில் பயன்படாது என்றவரோ.**

கண்ணனின் விடை – நெருப்பினால் எரிந்து போன பின்னும் மடித்து வைத்த துணிபோல் தோற்ற மாத்திரமாய் இருக்கும் துணி எதற்கும் பயன்படாதது போல இவ்வுலகத் தோற்றம், அதனால் ஏற்படும் சுகதுக்கங்கள் ஞானிகளைப் பாதிப்பதில்லை.

**68.** **கன்மவினை அஞ்ஞானம் கடந்தும்அதன் காரியமாம்**
**புன்மைஉறு மெய்உடனே போகாதது ஏதுஎனவே.**

அருச்சுனன் வினா – பிறவி உண்டாவதற்கு காரணமாக இருக்கின்ற சஞ்சிதகர்மமும், இந்த சரீரத்தில் செய்த நல்வினை தீவினைகளாகிய ஆகாமிய கர்மமும், அஞ்ஞானமும் ஆகிய இவை தத்துவ ஞானத்தினால் நீங்கினாலும் இழிவான உடல் உடனே நீங்காமல் சிலகாலம் வாழ்கின்றதே ஏன்?

---

* *கனவு = சொப்பனம்.*

* *ஜாக்ரம் = விழிப்பு.*

* *தெத்தபடம் = எரிந்து போன மடிப்புக் கலையாத துணி.*

**69. வெட்டவிழும் மரம்பசந்து விளங்குதல்போல் சிலகாலம்**
**நட்டகன்மம் மாய்ந்தும்அங்கம் நடித்திடுங்காண் என்றவரோ.**

கண்ணனின் விடை – கோடரியால் வெட்டப்பட்டுச் சாய்கின்ற மரம் வேரின் சம்பந்தம் அற்றபிறகும் காயாது பசுமையாகச் சிலகாலம் தோன்றுதலைப் போல அஞ்ஞானம் நீங்கினாலும் முற்பிறவிகளில் செய்த வினைகள் (பிராரப்த கர்மம்) உள்ளவரை உடல் சில காலம் நீடித்திடும்.

**70. சென்மம்போய் முத்தியினைச் சேரச்சி லர்இருக்கத்**
**தொன்மைஆன் மாபலவோ சொரூபம்ப கரும்என.**

அருச்சுனன் வினா – சிலர் பிறப்பினின்றும் நீங்கி வீடுபேறு அடையச் சிலர் மட்டும் அதனைச் சேராமல் உலக விஷயங்களில் பற்றுடையோராய் ஈடுபாடு கொண்டிருப்பது ஏன்? அநாதியாய் இருக்கின்ற ஆன்மா பலவோ? அப்படி எனில் அவ்வான்மாவின் உண்மை வடிவினைக் கூறியருள்க.

**71. பிரமம்என்றும் ஈசன்என்றும் பெருகுபல சீவர்என்றும்**
**உரைமயக்கம் அலதுஆன்மா ஒருவனே என்றவரோ.**

கண்ணனின் விடை – பிரமம் எனவும் ஈசன் எனவும் அநேக சீவர்கள் எனவும் கூறுவது ஒரு வித மயக்கமே. ஆனால் ஆத்மா ஒன்றே.

**72. ஏகம்தான் ஆன்மா எனும்வகையே மெய்ஆனால்**
**ஆகந்தோ றும்பலவாய் அமர்ந்ததுஎன்னோ சொல்லும்என.**

அருச்சுனன் வினா – ஆத்மா ஒன்று எனக் கூறினீர்கள். அது உண்மையானால் அந்த ஏக ஆன்மா உடல்கள் தோறும் வேறு வேறாய்த் தோன்ற யாது காரணம்?

**73. பலகடத்தில் சலத்துஊடு பானுவிம்பம் தோன்றுதல்போல்**
**தொலைவுஇல்புத்தி தொறும்ஆன்மா தோன்றுதல்காண் என்றவரோ.**

கண்ணனின் விடை – பல குடங்களில் உள்ள நீரினிடத்தில் சூரியனின் பிரதி பிம்பம் பலவாகக் காணப்படுதல் போல எண்ணிக்கையில் முடிவில்லாத மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் தோறும் ஆன்மா தோன்றுவதை நீ அறிவாய்.

74. **ஆதித்தன் போல்ஆன்மா அளவுஇல்புத்தி தொறும்தோன்றில்**
**சாதிக்கும் முத்திஎவர் தமக்குஅதனைச் சாற்றும்என.**

அருச்சுனன் வினா – ஒரே சூரியன் குடத்து நீரில் பலவாகத் தோன்றுதல் போல ஆன்மாவும் அளவிலாத அந்தக் கரணங்கள் தோறும் தோன்றுமெனில் கிடைக்கின்ற வீடுபேறு அந்தக்கரணம், ஆத்மா என்னும் இரண்டில் எதற்குக் கிடைக்கும்? என அருளிச் செய்க.

75. **பந்தம்முத்தி தானும்அந்தப் பரந்தபுத்தி தனக்கேயாம்**
**அந்தவிம்பம் தனக்குஇலைஎன்று அறிவுவரச் சொன்னவரோ.**

கண்ணனின் விடை – அஞ்ஞானத்தால் ஏற்படும் பந்தமும் வீடுபேறும் முன்னர்க் கூறியதுபோல் விரிந்து காணப்படும் அந்தக் கரணத்திற்கேயாகும். முன்னர்க் கூறிய பிம்ப வடிவான ஆத்மாவிற்குப் பற்றும் இல்லை வீடுபேறும் இல்லை.

76. **பரம்ஏகம் ஆயும்அதில் பலசீவர் ஏதுஎனவே**
**ஒருகடலில் பலகுமிழி உதிப்பதுபோல் என்றவரோ.**

அருச்சுனன் வினா – பரம்பொருள் ஒன்றாய் இருந்தும் அந்தப் பிரம்மத்தின் கண் பல சீவர்கள் தோன்றுவதற்குக் காரணம் யாது?

கண்ணனின் விடை – ஒன்றாய் இருக்கும் கடலில் பலநீர்க்குமிழிகள் காற்றினால் உண்டாவது போல பரப்பிரம்மத்தில் மாயை சம்பந்தப்படும்போது பல சீவர்கள் தோன்றுவார்கள்.

77. **சீவன்அது தான்என்றும் சேரும்பி ரமம்என்றும்**
**ஆவதுவோ பேர்இன்பம் ஆங்கதுஎனக்கு ஓதும்என.**

அருச்சுனன் வினா – தன் வடிவம் சீவாத்மா எனவும் தான் வழிபட்டு அடையத் தகுந்தது பரமாத்மா எனவும் அறிந்துகொள்வதே முக்தி நிலையா? அதனை எனக்குக் கூறியருளும்.

78. **ஏகம்பி ரமம்இ ரண்டுஇலைநீ வேறும்அல**
**சோகம்உறும் பேதம்அறில் தோன்றும்இன்பம் என்றவரோ.**

கண்ணனின் விடை – பிரம்மம் என்பது ஒன்றே. இரண்டாவதுபொருள் இல்லை. நீயும் அப்பிரம்மத்திற்கு அந்நியமானவன் அல்லன். துக்கம் வருவதற்குக்காரணமான வேறுபட்ட புத்தி நீங்கிவிட்டால் இன்ப நிலை உண்டாகும்.

**79. சீவபே தம்போமோ சித்துஒன்றுஆ மோஎனவே**
**ஆவல்மனம் அறும்சுழுத்தி அவத்தையில்பார் என்றவரோ.**

அருச்சுனன் வினா – சீவனுக்கும் பிரம்மத்துக்கும் உள்ள வேற்றுமை நீங்கிடுமோ? அங்ஙனம் வேறுபாடு ஒழிந்து ஒரே வடிவாக விளங்குமோ?

கண்ணனின் விடை – ஆசைகொண்ட அந்தக்கரணங்களில் ஒன்றான மனம் சுழுத்தி அவத்தையில் வேறுபாடு நீங்கி ஒன்றாக விளங்குவதை உணர்வாய்.

**80. பேதம்அல இவ்வுலகம் பிரமமயம் என்றுஅறிந்தும்**
**பூதமய மாய்த்தோற்றல் போகாதது ஏதுஎனவே.**

அருச்சுனன் வினா – கண்ணுக்குத் தோன்றுகின்ற இவ்வுலகம்அந்நியம் அன்று. அது பிரம்ம வடிவமே என்பதை அறிந்தும் ஐம்பூத வடிவாகத் தோன்றுகிறதே. அதற்கு என்ன காரணம்?

**81. கானலைநீர் என்றுஓடிக் கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்**
**வான்உலவு நீர்ஆகி வயங்குதல்போல் என்றவரோ.**

கண்ணனின் விடை – பாலை நிலத்தில் சூரிய வெப்பத்தால் தோன்றும் உஷ்ண கிரணத்தினை நீர் என்று கருதிச் சென்று, இது உண்மையான நீரன்று கானலே, என்று உணர்ந்தவர்க்குக் கூட அம்மயக்கம் நீங்கிய பின்னும் நீரோட்டம் இருப்பதுபோல் கண்களுக்குப் புலப்படுகிறது. அதுபோல இவ்வுலகம் பிரம்ம வடிவம் என்றறிந்த பின்னரும் பஞ்ச பூத வடிவாகத் தோன்றும்.

**82. அறிவானும் நல்அறிவும் அறியப்ப டும்பொருளும்**
**பிறிவாய்மூன்று ஆயிருத்தல் பேதம்அல வோஎனவே.**

அருச்சுனன் வினா – அறிவான் என்றும், அறிவு என்றும், அறியப் படும் பொருள் என்றும் மூன்றாகப் பிரித்திருக்கிறதே. இது பிரம்மம் ஒன்றே என்று தாங்கள் சொன்னதற்கு விரோதமல்லவா?

(அறிவான், அறிவு, அறியப்படும் பொருள் இவற்றை 'திரிபுடி' என்று வேதாந்த பாஷையில் சொல்வார்கள்.

அறிவான் = பொருளைப் பார்த்தோ கேட்டோ அறிபவன்.

உதாரணம் = மரத்தைப் பார்ப்பவன்.

அறிவு = பார்த்த அல்லது கேட்ட பொருளைப் பற்றிய உணர்வு அல்லது அறியும் தன்மை.

உதாரணம் = இது பசுமையான மரம் என்று அறிதல்.

அறியப்படும் பொருள் = நாம் பார்க்கின்ற அல்லது கேட்கின்ற பொருள், மரம்)

**83. சொப்பனத்தில் தனித்துஒருவன் தோற்றம்வேறு இல்லைஅங்கே**
**கற்பனையாம் பொருள்அறிவு காண்பவன்போல் என்றவரோ.**

கண்ணனின் விடை – ஒருவன் தனியே தூங்குகின்றான். அவன் கனவில் பல சம்பவங்கள். பலரைப் பார்க்கிறான். விழித்தபிறகு அவன்தான் இருக்கிறான். எதுவும் இல்லை. யாரும் இல்லை. அந்தக்கரணத்திலுள்ள எண்ணக் கூட்டங்கள் கனவாக உருவெடுத்தன. கனவும் காண்பவனும் ஒன்றே.

**84. கற்பனையாம் பேதங்கள் காணாமல் போம்வகையை**
**விற்பனமாய் நான்அறிய விளம்பும்என வேவணங்க.**

அருச்சுனன் வினா – பொய்யான, கற்பனை வேறுபாடுகள் தோன்றாமல் நீங்கும் தன்மையினை அடியேன் தெளிவாய் உணர்ந்து கொள்ளும்படி கூறியருள்க.

**85. துரியம்ஆம் யோகத்தால் தூயமனம் லயம்ஆனால்**
**அரியமூ வகைவிகற்பம் அழியும்என்று சொன்னவரோ.**

கண்ணனின் விடை – தன்மயமாய் நிற்கும் நிதித்தியாசன யோகப் பயிற்சியால் தூயமனம் பிரம்ம சொரூபத்தில் ஒடுங்குமானால் மூன்றுவகையாக உள்ள வேறுபாடுகள் மறையும்.

**86. சிறந்துஇருக்கும் ஆன்மாவும் செகம்எல்லாம் நிறைந்துஇருந்தும்**
**மறைந்துஎனக்குத் தோன்றாத வகைஏது சொல்லும்என.**

அருச்சுனன் வினா – சிறப்பியல்புகள் நிறைந்த ஆன்மா உலகம் முழுதும்

87. **சத்துச்சித்தா னந்தம் தாம்மூன்றும் அதன்உடனே**
**ஒத்துஉற்று நாமஉ ருவம்ச கம்ஆகி.**

கண்ணனின் விடை – சத்துசித்து ஆனந்தம் என்று மூன்று விதமாக விளக்கப்படும் பிரம்மத்துடன் நாமம் ரூபம் (பெயர், வடிவம்) என்ற இரண்டும் ஒன்றாய்ப் பொருந்தி உலகம் தோன்றியிருக்கிறது.

88. **இருக்கையினில் தோன்றாது இவைமூன்றும் பிரமம்என**
**மரிக்கில்*வரும் பின்இரண்டு மறிசகம்என்று உரைத்தவரோ.**

இவற்றைப் பாகுபடுத்தி உணரும் தன்மை இல்லாதபடியால் ஆன்மாவைப் பற்றி உனக்கு எதுவும் விளங்கவில்லை. சத்துசித்து ஆனந்தம் இம்மூன்றும் பிரம்மம் வடிவம் என்பதையும், நாமம் ரூபம் இரண்டும் அழியும் தன்மை உடைய உலக வடிவம் என்பதையும் நீ உணர்ந்து கொள்ளும் போது ஆனந்த வடிவமான ஆன்மாவைக் காண்பாய். நாமம் ரூபம் இரண்டையும் மறுத்தால் தெளிவு உண்டாகும்.

89. **அறிந்துகொள்ஞா னத்தாலே ஆன்மாவை என்றுஉரைத்தீர்**
**சிறந்துஒளிரும் ஆன்மாவும் திருசியமா மோஎனவே.**

அருச்சுனன் வினா – அபரோட்ச ஞானத்தினால் ஆத்மாவை உணர்ந்து கொள்க என்று சொன்னீர். சத்து சித்து ஆனந்த மயமாய்ச் சிறப்புற்று விளங்கும் ஆன்மாவும் காணப்படும் பொருள் ஆகுமோ?

90. **முந்தியஞா னத்தாலே முதிரும்அஞ்ஞா னம்துறக்கில்**
**சிந்தையில்ஆன் மாச்சுயம்ஆய்த் திகழும் என்று சொன்னவரோ.**

கண்ணனின் விடை – அபரோட்ச ஞானம் திடப்படுவதனால் அஞ்ஞானம் நீங்கிய உடனே சித்தத்தின் கண் உள்ள ஆத்மா தானாகவே விளங்கும்.

---

* *மரிக்கில் = சிந்தனை செய்தால்.*

91. **இனியமுத்திச் சுகம்இருப்பது எப்படிஎன் றேவினவ**
**அனுபவத்தில் அறிவிடயா னந்தம்போல் என்றவரோ.**

அருச்சுனன் வினா – யாவராலும் விரும்பத்தக்க வீடு என்ற பேரின்ப நிலை எவ்வாறிருக்கும்?

கண்ணனின் விடை – இனிப்பை உண்டு அனுபவித்திராதவனுக்கு தித்திப்பு என்றுசொன்னால் அந்தச் சுவையை உணர முடியாது. இனிப்பை நாவினால் சுவைத்தால்தான் உணரமுடியும். அதுபோல பேரின்பநிலையை தானே உணர்ந்துதான் அறியமுடியும்.

92. **மனலயம்வந்தவர்அலது மற்றுஇலரோ முத்தர்எனச்**
**சனகனைப்போல் சீவன்முத்தர் தாமும்உளர் என்றவரோ.**

அருச்சுனன் வினா – மனம் ஒடுங்கிய சமாதி நிலையால் அடக்கம் கைவரப் பெற்றவர்களே அல்லாமல் வீடு பேறடைந்தவர் வேறு யாரும் இல்லையோ?

கண்ணனின் விடை – சனகப் பேரரசனைப் போலச் சமாதி நிலையிலேயே மூழ்கி இராமல் கடமைகளைச் செய்துகொண்டே வீடுபேறடைந்தோரும் இருக்கின்றார்கள்.

93. **சீவன்முத்தி அடைந்தோர்கள் செயலும்அவர் தம்குணமும்**
**நாஉரைக்கும் வாசகமும் நான்அறியச் சொல்லும்என.**

அருச்சுனன் வினா – வீடுபேறடைந்தோரது தொழிலும், குணமும் அவர்கள் சொல்கின்ற வாசகமும் அடியேன் உணர்ந்து கொள்ளுமாறு உரைத்தருள்க.

94. **வரும் கருவு பிறப்பி னொடு வளர்தல் பருத்தல்குறைதல்**
**ஒருங்கலும் மெய்க்கென்று அதனை ஒறுத்திருப்பார் என்றவரோ.**

கண்ணனின் விடை – சீவன் முத்தர்கள் தாயின் கருவிலிருந்து பிறத்தலும் பின் வளர்தலும் பெருத்தலும் சிறுத்தலும் அழிதலும் ஆகிய வேறுபாடுகளும் உடலுக்கே என்று தெளிந்து அந்தச் செயல்களை சகித்துக்கொண்டிருப்பார்கள்.

95. **பார்ப்பதுவும் கேட்பதுவும் பகர்வதுவும் செல்வதுவும்**
**ஏற்பதுவும் கரணதன்மம் எனத்துணிவார் என்றவரோ.**

பார்த்தலும், கேட்டலும், கூறலும், செய்தலும், நடத்தலும், பெறுதலும், வாங்குதலும் ஆகிய அனைத்தும் ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்களுக்கே உரிய தருமங்கள் என்று அறிந்துகொண்டிருப்பார்கள்.

**96. பசிதாகம் உயிர்க்குளனவே பயம்துக்கம் சுகம்காமம்**
**வசிகோபம் மதிக்குளனவே மகிழ்ந்துஇருப்பார் என்றவரோ.**

பசியும் தாகமும் பிராணனுடைய தர்மம் என்றும் அச்சம், துக்கம், சுகம், ஆசை, சினம் ஆகியன அந்தக்கரணத்திற்கே என்றும் கருதி எப்போதும் மகிழ்வுடனேயே இருப்பார்கள் சீவன் முத்தர்கள்.

**97. வீடும்தா ரமும்உறவும் மேவிஎன்றும் இருந்தாலும்**
**நீடும்தா மரைஇலைநீர் நிகர்ஆவார் என்றவரோ.**

வீட்டையும் மனைவியையும் சுற்றத்தாரையும் எப்பொழுதும் சேர்ந்தே இருந்தாலும் தாமரை இலைமேல் உள்ள தண்ணீர் அவ்விலை மேல் ஒட்டாது இருப்பது போல் இருப்பார்கள். (குடும்பப்பற்று நீங்கிவிடும்)

**98. பற்றிடும்கா யமும்தானும் பன்னாள்ஒன்று ஆயினும்பின்**
**உற்றபுளி யம்பழமும் ஓடும்ஒப்பார் என்றவரோ.**

பொருந்திய இவ்வுடம்பும் ஆன்மாவாகிய தானும் பலகாலம் பிரிக்க முடியாமல் ஒன்றாக விளங்கினாலும் ஞானமடைந்த பின்னர், பிஞ்சாய் இருக்கையில் பிரிவு படாமல் ஒன்றாய் இருந்து பின் முதிர்ந்த பொழுது புளியம் பழமும் ஓடும் ஒட்டாமல் விளங்குதல் போல் ஞானிகள் ஒன்றாய் இருப்பினும் உடற்பற்று நீங்கி வேறுபட்டு விளங்குவார்கள். (தேகப்பற்று நீங்கிவிடும்)

**99. கூறும்உலகு இயற்கைஉடன் கூடினும்மெய்ஞ் ஞானம்வந்தோர்**
**சேறும்பிள்ளைப் பூச்சியும்போல் திரிவார்காண் என்றவரோ.**

உலக இயற்கையோடு பொருந்தியிருந்தாலும் உண்மையறிவு கைவரப்பெற்ற பெரியோர் சேறும் அதனுள் சேறு படியாமல் உலவும் பிள்ளைப் பூச்சியினையும்* போல் இவ்வுலக வாழ்க்கையில் பற்றில்லாமல் தங்கள் கடமைகளைச் செய்து வருவார்கள்.

---

* *சேற்றில் உழலும் ஒரு வகைப் பூச்சி. அதன் மீது சேறு படியாது.*

100. ததிஊடு கடைந்தவெண்ணெய் தான்மோரில் கிடப்பதுபோல்
மதியோடு கூடினும்பின் மயங்கார்காண் என்றவரோ.

தயிரில் ஒன்றாய்க் கலந்து இருக்கும் வெண்ணெய் கடைந்து எடுக்கப்பட்ட மோரினில் கலவாது வேறுபட்டுக் கிடத்தல் போல ஞானம் வந்தபின் அந்தக்கரணச் செயல்களோடு ஞானிகள் சேர்ந்திருந்தாலும் மயங்கமாட்டார்கள்.

101. அருச்சுனன்தன் பொருட்டாக அனைவருக்கும் ஞானம்வரப்
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே கண்வளரீர்.

அருச்சுனனை முன்னிட்டு அனைவருக்கும் ஞானம் உண்டாகும்படி உபதேசித்து சுகத்தைக் கொடுக்க வந்த ஞானாசாரியரே தொட்டிலில் கண் வளர்க.

102. ஆயர்குல மாதர் அளவுஇலோ ரைப்புணர்ந்தும்
தூயபதி னாறுஆ யிரவருடன் தோய்ந்துஇருந்தும்.

அளவிலாத இடையர் குலப் பெண்களைச் சேர்ந்தும் தூயவர்களான பதினாறாயிரம் தேவ கன்னியரோடு சேர்ந்திருந்தும்;

103. பரமமு னிவர்முன்னே பரிச்சித்தைத் தீண்டிஅன்று
பிரமசரி யம்செலுத்தும் பேர்ஒளியே கண்வளரீர்.

உத்தரையின் வயிற்றில் இறந்து பிறந்த பாண்டவர்களின் பேரனாகிய பரிச்சித்து என்ற சிசுவைத் தங்கள் கைகளால் தொட்டு உயிர் பெறச் செய்தீர்கள். "நித்திய பிரமசாரியின் கரங்களால்தான் குழந்தை உயிர் பெற்றெழும்" என்ற வாக்கைத் தங்கள் ஆச்சரியமாக மெய்யாக்கினீர்கள். அப்படிப்பட்ட தெய்வீகப் பேரொளியே தொட்டிலில் கண் வளர்வீராக.

## நூல் கற்போருக்கு உரிய பயன்

**104.** **ஆதிமூ லம்விசயற்(கு) ஆதிமறை யின்பொருளை**
**ஓதி உணர்த்தும்இந்த உண்மைதனைக் – காதல்உற்றுக்**
**கற்றோரும் கேட்டோரும் காசினியில் வாழ்ந்துமுத்தி**
**பெற்றோர்கள் முத்தர்பெறும் பேறு.**

ஆதிமூலமாகிய கண்ணபிரான் விசயனுக்கு வேதத்தின் பொருளினை உணர்த்திக் காட்டிய இந்த உண்மையாகிய கீதாசாரத்தினை விருப்பமுடன் படித்தோரும், குருமுறையாய் கேட்டு ஓதியவரும் இவ்வுலகில் நெடுநாள் வாழ்ந்து ஞானிகள் அடையும் பேறாகிய வீடு பேற்றினை அடைவார்கள்.

**கீதாசாரம் முற்றும்**

# முகவுரை

சுமார் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் தவத்திரு தத்துவராய சுவாமிகள். அவர் தம்முடைய குருவின் மீதுள்ள அன்பினால் அவரை மகிழச் செய்வதற்காகவே பல ஞான நூல்களை இயற்றினார். அவற்றில் ஒன்று மோகவதைப் பரணி என்ற நூல். இந்நூலின் ஒரு பாகமாக சசிவன்ன போதம் விளங்குகிறது. விருத்தாசல புராணத்திலும், சூத ஸம்ஹிதை என்ற நூலிலும் சொல்லப்பட்டுள்ள சசிவன்னன் என்பவனின் கதையைக் கொண்டு இந்நூலை இயற்றினார்.

சசிவன்ன போதம் என்னும் நூல் முமுக்ஷுக்களாகிய பிசாசுகளுள், ஒரு பிசாசு, குருவாகிய காளிகாதேவியைப் பார்த்து பாபிகளும் மோட்சம் அடைதல் கூடுமா? என்று கேட்க பாபிகளும் மோட்சம் அடையலாம் என்பதை விளக்குவதாக, இந்நூல் அமைந்துள்ளது.

செய்யக்கூடாத பாப காரியங்களைச் செய்த ஒரு கீழ்மகன் ஒரு சிறந்த தந்தையினால் அரவணைக்கப்பட்டு அவருடைய முயற்சியினால் ஒரு சீவன் முத்தரான குருவை அடைந்து விடுகிறான். அவருக்குத் தொண்டு செய்து பரிசுத்தனாகி குருவின் கருணையால் தானும் பேரின்ப நிலையை அடைந்துவிடுகிறான். இதை ஒரு கதை வடிவாகச் சொல்லி எப்படிப்பட்ட பாவிக்கும் குருவின் கிருபையினால் சாதனைகள் செய்து பிறவிக்கடலை நீந்திக் கடக்க முடியும் என்று உறுதியாகக் கூறுகிறார், இறும்புதூர் (தற்போது எறும்பூர்) என்ற ஊரில் சமாதி அடைந்தவரான தத்துவராய சுவாமிகள். குருவின் பெருமையையும் குருவுக்குத் தொண்டு செய்வதின் பெருமையையும் இந்த நூல் எடுத்து விளக்குகிறது. “தத் த்வம் அஸி” என்ற மகா வாக்கியத்தின் பொருளை தெள்ளத் தெளிவாகக் கூறுகின்றது. தூல தேகம் முதல் பஞ்ச கோச விசாரத்தை, அனேக யுக்தியோடு கூடப் பசுமரத்து ஆணிபோல் மந்தருக்கும் மனதில் பதியும்படி செய்விக்கின்றது. அவத்தைகளை பலவிதமாகப் பிரித்து கூறுகின்றது. அஞ்ஞான இருளை போக்கி உண்மைப் பொருளை விளக்குகிறது, இந்நூல்.

உ
சிவமயம்

# சசிவன்ன போதம்

## தவத்திரு தத்துவராய சுவாமிகள் இயற்றியது

### கடவுள் வாழ்த்து

மதிபருதி எரிநீர்கால் வான்அவனி
இயமானன் வடிவாய் எல்லா
அதிபதியாய் அனைத்தும்ஆய் அல்லாத
அறிவுருவை* அகத்துள் வைப்பாம்.

சந்திரன், சூரியன், தீ, நீர், காற்று, வானம், பூமி, சீவன், என்னும் எட்டு மங்கல மூர்த்தம் ஆகவும், எல்லாவற்றிற்கும் அதிபதியாக இருப்பவரும் எல்லாம் ஆகியும் எங்கும் வியாபித்தும் இருக்கின்ற அறிவு வடிவினை மனத்துள் வைத்து வணங்குவோம்.

சொல்லால்தம் மதிவிரகால் தூயதுஇது
தீயதுஇது என்னும் மாக்கள்
எல்லார்க்கும் அதுஅதுஆய் இறைஇருக்கும்
படியேயாய் இருக்க என்றே.

சாத்திரங்களைப் படித்த கல்விமான்கள் தங்கள் பேச்சுத் திறமையினாலும், அறிவுக்கூர்மையினாலும் இந்த வழி தூய்மையானது; இந்த வழி தீமையானது என்று வாதம் செய்வார்கள். ஆனால் யார் யார் எப்படி எப்படி நினைக்கிறார்களோ அந்தப்படியெல்லாம் விளங்குகிறார் சர்வேசுவரனான கடவுள். அதேபோல நானும் சமயங்களைப் பற்றிய உயர்வு தாழ்வு என்ற எண்ணங்கள் இல்லாமல் இருக்க இறைவனைத் துதித்து அவன் அருளை வேண்டுகிறேன்.

---

* அறிவுரு – சுத்த பிரம்மம்.

1.* **முடிவும் ஆதியும் அற்ற முழுமுதல்**
**வடிவமாகி வரும்படி எங்ஙனே?**

“ஆதியும் அந்தமும் இல்லாத முழுமுதற் கடவுள் ஒரு வடிவம் தாங்கி வருவது எதற்காக?” என்று பேய்க் கணங்கள் தாங்கள் வழிபடும் தெய்வமாகிய காளி மாதாவைக் கேட்டன.

2. **சொல்லு கோலமோ சுருதி விருத்தமோ**
**அல்லவோ என அன்னை அருளுமே.**

‘வேதங்களில் விளக்கப்பட்ட பழமையான கோலம் சொற்களுக்கு அப்பாற்பட்டதோ?’ என்று கேட்க அன்னை அருள்சுரந்து கூறத்தொடங்கினாள்.

3. **அருவன் ஆயினும் அன்பர்க்(கு) உருவனாய்**
**வருவன் என்பது மாமறை சொல்லுமே.**

“உருவம் அற்ற பரம் பொருள் என்றாலும் அன்பு செய்பவர்கள் உள்ளத்தில் விரும்பிய மூர்த்தியின் வடிவாக வருவார்” என்று மாமறைகள் சொல்லுகின்றன.

4. **பத்தி யாம்வலை யில்படும் பார்மிசை**
**புத்தியாலறி யொண்ணாப் புராணனே.**

உலகிலுள்ளோர் புத்தியினால் அறியமுடியாத தொன்மை வாய்ந்த பரம்பொருள் ஆவார். ஆயினும் பக்தி என்ற வலையில் அகப்படுவார்.

5. **தேவி இப்படிக் கூறத் திருவருள்**
**பாவி யேற்கு இலம் என்று பதைக்கவே.**

தேவியின் சொற்களைக்கேட்ட பேய்க் கணங்கள் பாவிகளான எங்களுக்கு இப்படிப்பட்ட மேலான கதி கிடைக்காமல் போகுமோ என்று பதைத்தன.

6. **அலகை அச்சம் அறஅக வான்களும்**
**உலகில் முத்தி பெறும்பரிசு ஓதுவாம்.**

---

* *பாடல் 1 முதல் 5 வரை பாரம்பரியமாக பாடத்தில் சேர்த்து படிப்பது மரபாகும். முந்தைய வெளியீடுகளில் இந்தப்பாடல்கள் இல்லை.*

பிசாசுகளே உமக்குள்ள அச்சத்தை நீக்குங்கள். பாவிகளும் உலகில் வீடுபேறு அடைந்த தன்மையினைக் கூறுவோம்.

**7. புணர்ந்த பாவம் எலாம்பரி பூரணம்**
**உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே.**

அந்தந்தப் பிறப்புக்களில் நமக்குண்டான பாவங்கள் எல்லாம் பிரம்மத்தை உணர்ந்த ஞானியின் கண்கள் பட்ட அளவில் ஓடிவிடும்.

**8. எழிலாரும் ஞானி* புகழ்என்னை கூற**
**உயர்வீடு இவன்சொல் வழிசெய்**
**தொழிலாளர் சேர்க்கை அதுகேளும் முன்னை**
**இதிகாசம் ஒன்று சொலவே.**

ஞானியாகிய குரு கூறுகின்றபடி செய்யும் மாணாக்கன், பெருமை பொருந்திய வீடுபேறு அடைவான். எனவே உள்ளத்தின் அழகு பொருந்திய ஞானியின் புகழை என்னவென்று சொல்வதாம்?

**9. தம்தாபம் அற்றப ரன்ஏவல் செய்த**
**அவன்உற்ற பேறு தனைமுன்**
**செந்தாம ரைக்கண்மு தல்வர்க்குஎம் அண்ணல்**
**திருவாய் மலர்ந்தது இதுவே.**

மூவகைத் துன்பங்களும்* நீங்கப் பெற்ற ஞானிக்குப் பணிவிடைகள் செய்த மாணாக்கன் அடைந்த நற்பயன்களை, முன்னொரு காலத்தில் செந்தாமரைக் கண்களை உடைய திருமாலுக்கு எங்கள் அண்ணலாகிய பரமசிவன் திருவாயினால் கூறியது இதுவே.

---

* *எழிலாரும் - ஞானம் பெற்றவர்களின் கருணை, பக்தி வைராக்யம், பிரம்ம ஞானம் இவை பொருந்திய அழகு.*
* *மூவகைத் துன்பங்கள் :–*
*1 அத்யான்மிகம் - வாத–பித்த–சிலேத்தும ஏற்றத்தாழ்வினால் உடலில் ஏற்படும் பல வகையான நோய்களின் துன்பங்கள்.*
*2 ஆதிபௌதிகம் - பிற உயிர்களாலாவது, திருடன், பாம்பு, தேள் முதலிய உயிர்களால் வருகின்ற துன்பங்கள்.*
*3. ஆதி தெய்வீகம் - பூகம்பம், புயல், இடி, மின்னல் மழை முதலிய துன்பங்கள் மூன்றும் தூல உடலை தாக்குபவை*

10. **உவமிப்பின் ஞானிவி ழிபட்டு முன்னை**
**வினைவிட்டு முத்தி உலகில்**
**தவமற்ற வெய்யவி னையேபு ரிந்த**
**சசிவன்னன் எய்து கதையே.**

உவமையொன்றும் கூற இயலாத ஞானியினது கருணை மிகுந்த பார்வை பட்டு முன் செய்த தீவினைகள் யாவும் விட்டு நீங்கி, உலகில் சிறிதும் புண்ணியம் செய்யாமல் கொடிய வினைகளையே செய்த சசிவன்னன் வீடுபேறு அடைந்த கதை இதுவே.

11. **ஏமம் புகுவார் உளபா தகராம்**
**யாவர்க் குளும்மிக் கவன்ஆ கும்இவன்**
**நாமம் புகல்வார் குலமும் எரிவாய்**
**நரகம் புகுமா றுநடந் தனனே.**

நரகம் அடைகின்ற பாவிகள் எல்லோரையும்விட இந்தச் சசிவன்னன் அதிக பாவம் செய்தவன். இவன் பெயரைக் கூறுபவர்களது குலமும் அவர்களது வம்சமும் தீவாய் நரகத்தினை அடையும்படி தீய செயல்களைச் செய்து வந்தான்.

12. **மலம்மே வியதீ வினையின் வலியால்**
**மகிழ்உம் பர்பதத் தில்இருந் தஇவன்**
**குலம்மே வியதென் புலவா ணர்களும்**
**கொடிதுஆம் நரகம் குடி ஏறினரே.**

சசிவன்னன் செய்த பாபங்களினால் அவனுடைய குலத்து முன்னோர்களும், பிதிர் லோகத்தை விட்டு எரிவாய் நரகம் புகுந்தனர். (பலதலைமுறைகள்ளச் சேர்ந்த முன்னோர்களைக்கூட அவனுடைய கொடிய பாபங்கள் பாதித்தன)

13. **மிகமே வியபுண் ணியபா வம்எனும்**
**வினையின் பயன்மேல் ஒருகா லம்உறாது**
**இகமே வரும்என் பதனால் உளநோய்**
**எல்லாம் இவனைச் செறஎய் தினவே.**

4448 நரம்புகளில் வரக்கூடிய எல்லாப் பிணிகளும் சசிவன்னனை உயிரோடு வதைக்க வந்து அடைந்தன. "பாவபுண்ணியங்களின் பலன்கள் அடுத்தடுத்த பிறவிகளில்தான் அனுபவிக்க வேண்டும் என்று நியதி இல்லை. இந்தப் பிறவியிலேயே

அனுபவிக்க நேரிடும்" என்பதனால் சசிவன்னன் சகிக்க முடியாத வியாதிகளை இந்தப் பிறவியிலேயே அனுபவித்துத் துன்புற்றான்.

14. தன்புத் திரநே யம்விடா மையினால்
தவறுஉற் றஇவன் பெறுதந் தைஉளம்
துன்புற்று இனிஎன் னைகொலோ புதல்வன்
துயர்தீர் வகையென் றுசுழன் றனனே.

தவறான நடத்தையினால் கெட்டழிந்த சசிவன்னனுடைய தந்தை மிகவும் மனம் வருந்தினார். என் மகனின் துயரையும் வியாதிகளையும் எப்படித் தீர்ப்பது என்று மனம் கலங்கினார்.

15. ஒன்றா லும்வினைத் துயர்துய்ப் பதுஅலால்
ஒழிவிக் கும்உபா யம்உனக்கு இலதே
என்றா லும்அறிந்த வன்அன் புவிடாது
இவனைக் கொடுஉழன் றனன்எங் கணுமே.

பாவத்தினால் உண்டான துன்பத்தினை அனுபவித்து முடிக்க வேண்டுமே அல்லாமல் நிவர்த்தி செய்யும் வழி ஒன்று கூட உனக்குக் கிடைக்காது என்று அறிந்தோர் கூறினாலும் அவர்கள் கூறியதை கேட்ட தந்தை, தன் புதல்வன்பால் உள்ள பற்று நீங்காமையால் சசிவன்னனைக் கூடையில் வைத்துக் கொண்டு எங்கும் சுற்றி அலைந்தார்.

16. ஒருமா தவன்மற்று இவன்வே தனைகண்டு
ஒழிவற்று உளஒன் றைஉளத்து உணரும்
பரம்ஆ கியஞா னிகள்கண் உறலே
பரமஅ விழ்தம்என் றுபகர்ந் தனனே.

தந்தையின் துன்பத்தினை ஒரு பெருந்தவ முனிவர் பார்த்து இரங்கினார். நீக்கம் இன்றி எங்கும் நிறைந்துள்ள பிரம்மத்தினை மனத்தால் அறிந்துள்ள மேலான ஞானிகளின் கருணை மிக்க பார்வை இவன்மேல்படுமானால் அதுவே அவன் நோய்க்கு மருந்தாகும் என்று கூறினார்.

17. தான்அந் தம்இலா ததனைத் தருவான்
சத்தீச் சுரம்என் னும்இடம் தனில்வாழ்

**மாநந் திபரா யணர்என் பவர்நின்**
**மைந்தற்கு உறுநோய்க் குமருந்து எனவே.**

முடிவில்லாத ஞானத்தைப் பிறர்க்குக் கொடுக்கும் பொருட்டுச் சத்தீச்சுரம் என்ற ஊரில் வாழ்ந்து கொண்டிருக்கும் நந்தி பராயணர் என்று கூறப்படுபவரே உன் புதல்வன் சசிவன்னனுக்கு வந்துள்ள நோய்க்கு மருந்தாவார் என்று கூறினார்.

**18.** **முடியா உபதேசம் இதுஎன்று அவனும்**
**முனிவன் பதம்எய் திமொழிந் தனன்இக்**
**கொடியான் வெருவா துகுயிற் றியநோய்**
**கூறற்கு அரிதா யகொடுந் தொழிலே.**

சசிவன்னனுடைய தந்தை "முனிவர் கூறிய மொழி, ஒருவராலும் கூற இயலாத அருமையான உபதேசம்" என்று எண்ணிச் சத்தீச்சரம் சென்றார். நந்தி பராயண சுவாமிகளின் திருவடிகளை அடைந்து, இப்பாவியான சசிவன்னன், அஞ்சாது பிறர்க்கு இழைத்த கொடுமைகள் கூறுதற்கியலாத பாவச் செயல்கள் என்று சொன்னார்.

**19.** **ஈங்குஉன் திருமுன் பகரும்படியோ**
**இவன்எய் தியதீ வினைஎன் னஎலாம்**
**நீங்கும் படிதன் அனுபூ தியினால்**
**நிகழும் விழிவைத் தனன்நின் மலனே.**

இந்தச் சசிவன்னன் பிறருக்குச் செய்த தீயவினைகள் இங்கு உமது திருமுன்னர் சொல்லும் தகுதியுடையன அல்ல என்று தந்தை கூறலும், தூயவரான நந்தி பராயணர் தன்னுடைய பிரம்மானுபவத்தினால் பெற்ற கருணைமிகுந்த விழியால் சசிவன்னனது எல்லாப் பிணிகளும் ஒழியும்படி அருளினார்.

**20.** **கணியா தபவக் கடுவா னதிருக்**
**கண்வைத் தலும்விட் டனகா துகடும்**
**பிணியா வையும்நல் லபிதா இறைதாள்**
**பேணிப் பணிஎன் றுபெயர்ந் தனனே.**

இத்தனை பிறவிகள் என்ற எண்ணமுடியாத இகபர பந்தங்களுக்கு நஞ்சாக விளங்கும் தன் கருணைமிகுந்த கண்களால் சசிவன்னனை புனிதரான நந்திபராயணர் அன்புடன் பார்த்தார். உடனே சசிவன்னனை வதைத்துக் கொண்டிருந்த கொடிய

பிணிகள் நீங்கிவிட்டன. நன் நடத்தையும் மகன் மீது அன்பும் கொண்ட தந்தையானவர் "கடவுளைப் போல உனக்கு அருள்செய்த இவருக்கு இனிமேல் நீ தொண்டு செய்து பணிந்து நல்ல கதியைத் தேடிக் கொள்" என்று சொல்லி விடை பெற்று தன் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார்.

**21. இடனே முதலாக உவந்து இறையோன்**
**ஏவும் பணிசெய்து இவனும் சிலநாள்**
**உடனே இவனே திருமே னிதனக்கு**
**உரியான் எனஉற் றனன்உம் பனொடே.**

சசிவன்னனும் அங்கேயே இருந்துகொண்டு பிரம்ம ஞானியான நந்தி பராயணர் ஏவும் பணிகளை ஆர்வத்துடன் செய்து வந்தான். குருவுக்கு சேவை செய்யத் தொடங்கிய சில நாட்களிலேயே "அவருடைய திரு மேனிக்குத் தொண்டு செய்ய இவனே தகுதியுடையவன்" என்று பலரும் பாராட்டுமாறு ஆசிரியரோடு எப்போதும் கூடவே இருந்தான்.

**22. நன்றாய் முனிதாள் வழிபாடு அதனால்**
**நாநா விதமா னபிறப் பினைவிட்டு**
**ஒன்றுஆ கியவீடு உணர்உத் தமர்கட்கு**
**உளசா தனம்நா லும்உதித் தனவே.**

நந்தி பராயணரின் திருவடிகளுக்கு ஆர்வத்துடன் பணிவிடைகள் செய்து வந்தமையால், எழுவகைப் பிறப்பினால் ஏற்படும் 84 இலட்ச பேதமான பிறப்புக்களைக் கடந்து வீடுபேற்றினை அறிகின்ற உத்தமர்களுக்கு உள்ள நான்கு சாதனங்கள் சசிவன்னனுக்கு உண்டாயின.

**23. முனிவன் திருமுன்பு உளதன் குறைதான்**
**மொழிவன் சிலஅஞ் சலிகுஞ் சியதாய்ப்**
**பனிவந்து இருகண் கள்பதங் களிலே**
**பலகால் வலம்வந் துபணிந் தனனே.**

நந்தி பராயணரின் திருமுன்னர் கூப்பிய கைகள் தலைமேற் குவிய, இரு கண்களிலும் கண்ணீர் தாரை தாரையாய் ஒழுகப் பல முறை வலம் வந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். பிறகு தன் குறைகளைச் சொல்லத் தொடங்கினான்.

24. அருளே வடிவா கியமா முனிதான்
அறியா தவர்போ லஅழுங் கல்உறும்
பொருள்ஏது எனமைந் தன்நடுங் கினன்இப்
பொல்லா தபவப் புணரிக்கு எனவே.

அருளே வடிவாகிய மாமுனிவர் நந்தி பராயணர் ஏதும் அறியாதவர் போல, "நீ ஏன் வருந்துகின்றாய்? அதற்கு என்ன காரணம்?" என வினவலும் சசிவன்னன், "இக் கொடியதான பிறவிக் கடலுக்குப் பயந்தேன்" என்று கூறினான்.

25. வெருவும் பிறவிக் கடல்வித் தரம்முன்
வேதா கமகீ தைவிளம் பும்அதைக்
குருவும் தனதுஅன் பன்மனத்து அளவில்
கொளுமா றுதொகுத்து இவைகூ றிடுமே.

அஞ்சத் தக்க பிறவிக் கடலின் தன்மையை விரிவாக முன்னமே வேதாகமங்கள், கீதை முதலியன கூறியுள்ளன. அவற்றை நந்தி பராயணரும் தன் அடியவனான சசிவன்னனின் மனம் ஏற்கும் படியாகத் தொகுத்து உபதேசிக்கத் தொடங்கினார்.

## நந்தி பராயணரின் உபதேச மொழிகள்

26. மரண பவங்க ளான புனலை உடையது
மதியை விழுங்கு காம அரவு பெரியது
கரண ஒழுங்கு அறாது விடய இரைநுகர்
கணமொடு இயங்கும் மீனம் மிகவும் உகள்வதே.

பிறப்பு இறப்புக்களான நீரினை உடையது. நிலவு போன்ற அறிவை விழுங்கும் பெரிய ஆசைஎன்ற பாம்பை உடையது. ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் என்ற மீன்கள் கூட்டமாகத் துள்ளித்திரிந்து இடைவிடாது விஷய சுகங்கள் என்ற இரையைத் தேடிப் புசித்துக் கொண்டு அலையும் கடல் இது.

27. பெருமிதம் என்று கூறு பெருமை உடையது
பிணிகள் எனும்கெ டாத புலவு கமழ்வது
வரும்இடர் இன்ப மான திரைகள் பொருவது
மனம்எனும் வஞ்ச ராச மகரம் உறைவதே.

செருக்கையே பெருமையாக நினைப்பது. நோய்களால் உண்டாகும் நீங்காத புலால் நாற்றம் மணக்கப் பெறுவது. மாறி மாறி வரும் இன்ப துன்பங்களான அலைகள் மோதப் பெறுவது. வஞ்ச எண்ணங்கள் நிறைந்த மனம் என்ற திமிங்கிலம் வசிக்க இடமாயுள்ளது.

**28.** **அளவில் அகந்தை ஆமை அபரி மிதம்உளது**
**அவாவு நிறைந்த ஆழம் அறிய அரியது**
**களவு நெருங்கு பாரும் மலையும்* உடையது**
**கலக விடங்கள் மேவு கிருமி நெளிவதே.**

சம்சார சாகரமானது அளவிட இயலாத அகங்காரம் என்ற ஆமைகள் எண்ணிறந்தன வசித்தற்கு இடமாயுள்ளது. தன்னிடம் உள்ள ஆசையின் ஆழமானது அறிவதற்கும் அரியதாய் இருக்கின்றது. களவு என்று சொல்லப்படும் ஆபத்தான திடல்களையும் மலைகளையும் உடையது. கலகச் செய்திகள் என்ற விஷக்கிருமிகள் நெளிவது.

**29.** **துகள்எனும் நன்குஅ லாத நுரைகள் தருவது**
**துறவுஎனும் இன்பம் ஆன கரையை விடஅகல்**
**மகளிர் எனும்த வாத வலிய சுழியது**
**மறலியும் அஞ்சு கோப வடவை* எரிவதே.**

பிறத்தல், இறத்தல், பூப்பெய்தல் முதலான குற்றங்கள் எனும் அழுக்கு நிறைந்த நுரைகளைத் தருவது. துறவு என்ற ஆனந்த வடிவான கரையை அடைய விடாமல் தடுக்கும் பெண்கள் எனும் வலிய சுழியை உடையது. எமனையும் அஞ்ச வைக்கும் கோபம் என்ற வடவைத் தீ எரிந்து கொண்டிருப்பது.

**30.** **வெருவரு கின்ற போக முதலை உடையது**
**விவிதம் அனந்தம் ஆன துறையும் அறிபவர்**
**ஒருவர்க டந்து போக விரகில் எழுபவ**
**உததிவி ளம்ப யாவர் உலகில் அறிஞரே.**

---

* *கடலில் கப்பல் செல்லும்போது, மூழ்கியுள்ள பாறைகள், மலைகளில் மோதி மூழ்கிவிடும்.*

* *கடலில் ஆற்று நீர், மழை நீர், ஊற்று நீர் கலந்து கொண்டே இருப்பதால் கடல் நீர் பொங்கி நில பாகத்தை மூழ்கடித்து விடும். அதனால் இறைவன் தண்ணீர் வற்றுவதற்காக வடவைத் தீயை சாகரத்தின் அடியில் வைத்திருக்கிறார்.*

அஞ்சுகின்ற உலக இன்பங்களாகிய முதலைகளை உடையது. நானா விதமாயும் அநேகவிதமாயும் உள்ள நெறிகளையும் தர்மங்களையும் முறையாக உணர்ந்தவர்களுக்குக் கூட இதனைக் கடந்து செல்லும் திறமை இல்லை. *எழுவகைப் பிறவிகளுக்கு இடமாக உள்ளது. பிறவிப் பெருங்கடல் பற்றிக் கூறுதற்கு உலகில் அறிஞர் எவர் இருக்கின்றார்? ஒருவரும் இல்லை என்பது கருத்து.

**31.** **பொறிவழி சென்று மீளும் அவலம திகொடு**
**பொருசம யங்கள் ஆறும்* மறியவி ழும்அதில்**
**அறிவுஅழிவு ஒன்றுஇ லாதபொ ருள்எது எனஉள**
**அனுபவ வங்கம் ஏறும் அறிஞர் அகல்வரே.**

ஐம்புல அனுபவங்களில் தோய்ந்து மீண்டும் வருகின்ற அவல புத்தி கொண்டு தம்முள் சண்டையிட்டுக் கொள்கின்ற ஆறு சமயங்களைக் கடைப்பிடிப்பவர்கள்கூட மீண்டும் பிறவிக் கடலில் வீழ்வார்கள். அழிவு கொஞ்சம் கூட இல்லாத பொருளாய் உள்ள தத்துவஞானம் என்ற அனுபவக் கப்பலில் ஏறிச் செல்லும் அறிஞர்கள் பிறவிக் கடலைக் கடப்பார்கள். (பிரம்ம சொரூபத்தை உணர்ந்தவர்களாலேயே பவக்கடலைக் கடக்க முடியும் என்பது கருத்து)

**32.** **புணரி கடந்து போக விரகுஇல் எனமொழி**
**பொழுது புலம்பி ஆவி புதல்வன் இறும்முனம்**
**உணர்வுஎ னும்வங்கம் ஏறும் அறிஞர் அகல்வர்என்று**
**உரையை வழங்கி நாதன் உவகை அருளவே.**

ஆறு சமயங்களைச் சேர்ந்தவர்களுக்குக்கூட பிறவிக் கடலைத் தாண்டிச் செல்லத் திறமை இல்லை என்று சொன்ன பொழுது வருத்தமுற்றுச் சசிவன்னன் மனம் தளர்ந்து மயங்கி விழுந்தான். மெய் அறிவு என்னும் கப்பலில் ஏறிச் செல்லும் ஞானிகளால் கடக்க முடியும் என்று நந்தி பராயணர் வழங்கி மகிழ்ச்சியைக் கொடுத்தார்.

**33.** **வாழிஎன இறைவன்அடி தொழுதுவரு பவமாம்**
**ஆழியினை அகலும்அறிவு அருளுகஎன அவரே.**

---

* *எழுவகைப் பிறவிகள் : தேவர், மனிதர், ஊர்வன, பறப்பன, நடப்பன, நீர்வாழ்வன, தாவரங்கள்.*

* *ஆறு சமயங்கள் : காணாபத்யம், சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், சௌரம்.*

நந்தி பராயணரது திருவடிகள் நீடூழி வாழக் கடவது என்று சசிவன்னன் வணங்கி, தொடர்ந்து வரும் பிறவிக் கடலினைக் கடக்கின்ற அறிவினை அருள்க என்று விண்ணப்பிக்க, நந்தி பராயணர், விளக்கத் தொடங்குகிறார்.

**34. பரஅறிவும் அபரஅறிவும் எனவும்இரு பரிசாத்**
**திரஅறிவை அறியும்அவர் மொழிவர்தெளிவு உறவே.**

சாத்திரங்களைப் படித்தறிந்த ஞானிகள், ஞானம்பெற இடைவிடாமல் முயற்சி செய்வதே மேலான அறிவு என்றும் உலக இயல்பு தொடர்பான அறிவெல்லாம் கீழான அறிவென்றும் கூறுவார்கள். (மேலான அறிவு = பரஅறிவு; கீழான அறிவு = அபரஅறிவு)

**35. அபரஉணர்வு அருமறைகள் முதல்அகில கலையும்**
**உபரமது அறஉதவும் உணர்வுபர உணர்வே.**

அரிய வேதங்கள் முதல் புராணங்கள் வரையுள்ள அனைத்துச் சாத்திரங்களும் அபர அறிவாம். உலகபந்தம் நீங்க உதவும் ஞானம் பரஅறிவாகும்.

**36. ஆகமவி தங்கள்அறி வார்அபரம் அறிவார்**
**யோகமொடு உறங்கும்அவ ரேபரம் உணர்ந்தோர்.**

வேத சாத்திரங்களைக் கற்று உணர்பவர்கள் அபர ஞானம் உணர்பவர். யோக சமாதியில் இருக்கும் பெரியோரே பர ஞானம் அறிந்தோர்.

**37. புராணம்இதி காசம்எவை யும்பொருள் அனைத்தின்**
**பிராணன்அறி யாதுஎள இடத்துஇவை பிதற்றே.**

புராணங்களையும், இதிகாசங்களையும் ஏனையவற்றையும் அறிந்தார் ஆயினும், அனைத்திற்கும் உயிராக உள்ள பரம்பொருளை உணராவிட்டால் இவை யாவும் புலம்பலே ஆகும்.

**38. இயல்அறிவது இசைஅறிவது இனம்அறிவது உளவாம்**
**அயல்அறிவது அறிவதுஅல அறிவுஅறிவது அறிவே.**

இயல் தமிழ் படித்து இலக்கண இலக்கிய அறிவு பெறுவது, இசைத் தமிழில் புலமை பெறுவது முதலிய பல கல்விகள் எல்லாம் இந்த உலகத்துக்குத்தான் பயன்படும். இவை

ஆத்ம ஞானத்தைக் கொடுக்கும் அறிவாகாது. தனது உண்மையான சொரூபத்தை இடையறாத முயற்சியினால் அறிவதே உண்மையறிவு. (நானே பிரம்ம சொரூபம் என்று உணர்வதே உண்மை அறிவு.)

**39. நவிலுகலை அறுபத்து நாலும்அறி வாரும்**
**பவலயம்அது அறுசுத்த பரமம்அறி யாரே.**

நூல்களாலும், சான்றோர்களாலும் கூறப்படும் அறுபத்து நான்கு கலைகளை உணர்பவர்களும், பிறப்பு இறப்பு இல்லாத சுத்த பிரம்மத்தை உணர மாட்டார்கள்.

**40. ஆகஅறி வாளர்அறி வார்இவைய னைத்தும்**
**ஏகஅறி வாளர்இவை யாவும்அறி யாரே.**

ஆகம் என்பது உடல். தன் உடலையே தான் என்று நினைத்துக் கொண்டிருக்கும் மனிதர்கள் பற்பல கலைகளைக் கற்றுத் தேர்ந்து உலக வாழ்க்கையில் சிறப்புற்றிருக்கலாம்.

ஏக அறிவு என்பது பரபிரம்ம சொரூபமே தான் என்று உணரும் அறிவு. இந்த ஞானத்தைப் பெற்றவர்களுக்கு மற்ற கல்விகள் எதுவும் தேவை இல்லை.

**41. ஐயறிவு அறிந்துஅவை அடங்கின வரேனும்**
**மெய்யறிவுஇ லாதவர்கள் வீடது பெறாரே.**

ஐம்புலன்களை அறிந்து அவ்வவ்வுறுப்புக்களை அந்தந்த உணர்வுகளில் செல்ல விடாமல் அடக்கிய சித்தர்கள் கூட, மெய்யறிவு பெறாவிட்டால் வீடுபேற்றை அடைய மாட்டார்கள்.

**42. மெய்ம்மைஅறிவு அல்லதமில் வேறுஅறிவது எல்லாம்**
**தம்மைஅறி யும்அறிவ தேஅறிவு தானே.**

ஆத்மாவுக்கு அன்னியமான உலகியல் அறிவு எதுவும் உண்மையான ஞானம் அல்லவாம். ஆத்ம சொரூபத்தை உணர்கின்றதே ஞானம்.

**43. பூசனையும் அதுசகல பொருளும்அறி தமையும்**
**ஈசனையும் வேறதுஅற அறிவதுஅறிவு எனவே.**

இஷ்ட தெய்வத்துக்கு வழிபாடு செய்கிறோம். அர்ச்சனை செய்வதற்காக வெற்றிலை, பாக்கு, சந்தனம், குங்குமம், மலர், பழம், சாம்பிராணி, கற்பூரம், பால் முதலியவற்றைச் சேகரித்து அர்ப்பணிக்கிறோம். அப்படிப் பூஜை செய்பவனும், பூஜைக்குரிய பொருள்களும், பூஜை செய்யப்படும் ஈசனும் வேறு வேறல்ல. இவை அனைத்தும் ஈசனுடைய தோற்றங்களே என்று அறிவதே மெய்ஞானம்.

44. **தான்எனும்உ டம்பதுத னைத்தவிர வேறுஆய்**
**யான்எனும் அருத்தம்உள வோஅருளுக எனவே.**

"நான் என்று சொல்லுகின்ற உடம்பினை விட்டு வேறாக நான் என்று கூறுகின்ற பொருள் இருக்கின்றதா? இருப்பின் அடியவனுக்கு அருளுக" என்று சசிவன்னன் கேட்டுக் கொண்டான்.

45. **எனதுஆடை பொன்பூம கன்தையல் பாய்மா**
**இபங்கண்மு கம்கால்கை மெய்என்ன என்றும்**
**தனதுஆய் உரைப்பான்வ குத்துஇந்த ஊனைத்**
**தான்என்று அயர்த்தும்சொ லத்தக்கது அன்றே.**

என்னுடைய ஆடை, என்னுடைய பொன், என்னுடைய பூமி, என்னுடைய புதல்வன், என்னுடைய மனைவி, என்னுடைய குதிரை, என்னுடைய யானை என்றும்; கண், முகம், கால், கை, உடல் ஆகிய எல்லாம் என்னுடையவை என்றும், எப்பொழுதும் இந்தத் தசை மயமான உடலினை வெவ்வேறு பெயரால் தன்னுடையதாகக் கூறுவான். ஆதலால் என்னுடையது என்று வேறாகக் கருதும் இந்த ஊனுடலைத் 'தான்' என்று சொல்வது அர்த்தமற்றது.

46. **தாள்ஆக ஊர்ஆழி யார்வென்னில் வீணா**
**தண்டுஆக வன்மார்பு தட்டுஆக மொட்டா**
**நாளாம்ம லர்ச்சென்னி கூந்தல்கொ டித்தேர்**
**நாள்நாளும் ஊர்வானில் வேறுஆக நாடே.**

உடலை ஒரு தேருக்கு ஒப்பிட்டுக் காட்டுகிறார் நந்திபராயணர். நடந்து செல்கின்ற பாதங்களே சக்கரங்கள். அகன்ற மார்பே தேர்த் தட்டு, முதுகுத் தண்டே சக்கரங்களை இணைக்கும் கடையாணி. சிரம் தேரின் சிகரம். கூந்தல் தேரில் ஆடுகின்ற கொடி, ஐந்து புலன்களும் குதிரைகள். மனம் என்பது இழுத்துப் பிடிக்கும் கடிவாளம். புத்தியே

தேர்ப்பாகன். எஜமானன் தேரில் அமர்ந்து செல்கிறான். அவன் தேரிலிருந்து வேறுபட்டவன். அதுபோல ஆன்மா உடலினின்றும் வேறுபட்டு இருக்கிறது.

47. கடக்குஞ்ச ரம்பண்ணி உள்நின்று ஒருத்தன்
கைபாதம் கன்னங்கண் மெய்போல் இயக்கும்
கிடக்கும்ந டத்தாஇ டத்துஇவ் வுடம்பும்
கிடக்கும்ஒ ருத்தன்ந டத்தா இடத்தே.

மூங்கில் முதலியவற்றால் ஒருத்தன் மதம் ஒழுகும் யானை போல் ஒன்றைச் செய்து அதனுள் புகுந்து கொண்டு துதிக்கை, கால் செவி, கண், உடல் ஆகியவற்றை உண்மையாக அசைவன போல் ஆட்டி வைப்பான். ஒருவன் அவ்வாறு நடத்தாவிட்டால் யானை பொம்மை பூமியில் அசைவற்றுக் கிடக்கும். இவ்வுடம்பிலும் ஓர் ஆன்மா அதனுள் புகுந்து நடத்தாத போது உடல் அப்படியே அசைவற்றுக் கிடக்கும்.

48. ஒருகூறு மலமாகும் ஒருகூறு உடம்பாகும்
ஒருகூறு மனமாகும் உண்டுஅற்ற அன்னம்
இருகூறு நீஆகின் ஒருகூறும் நீஆம்
இழிக்கும்ம லம்சோறு இடப்பட்ட உடலே.

உண்டு சீரணித்த உணவுகளில் ஒரு பகுதி மலம் ஆகும். ஒரு கூறு உடலாகும். ஒரு பகுதி மனம் ஆகும். மலமும் மனமும் ஆகிய இவ்விரண்டு பிரிவும் உன்னுடைய வடிவமாயின் உடலும் உனது வடிவாம்.

(முதலில் ரதத்தைச் செலுத்துபவன் ரதத்தினின்று வேறுபடுகிறான் என்பதைச் சுட்டிக்காட்டினார். இனி தூலதேகம் ஆத்மா அன்று என நிரூபிக்கிறார். மனமும் மலமும் உனது வடிவம் இல்லை என்றால் சோறிடப்பட்டு வளரும் உடலும் நீ அல்ல என்று தெளிவுறுத்துகிறார் குரு)

49. கிளர்ஆத ரத்துஉண்ணும் அன்னம்சு டக்கை
கிட்டப்பொ றாதேஇ ருந்தார்மு னிந்தார்
தளராது உறுப்புஒன்றும் உயிர்போக அன்றே
தழல்பள்ளி மீதேது யின்றார்ச கித்தே.

ஆவலோடு சாப்பிட உட்கார்ந்தவன் அவசரப்பட்டு கொதிக்கின்ற சோற்றில் கையை வைத்த உடனே ஆத்திரமடைந்து மனைவியைக் கோபித்துக் கொள்கிறான். ஆனால்

உடல் உறுப்புக்கள் சேத மடையாவிட்டாலும் உயிர் போய்விட்டால் அவன் உடலை தீப் படுக்கையின் மீது கிடத்தினாலும் அந்த உடல் சூட்டை சகித்துக்கொள்கிறது. அதனால் உடல் நீயாகாது.

**50.** **நிழல்பாவை கண்ணாடி யில்பாவை கைகால்**
**நிமிர்க்கும்மு டக்கும்இ வன்செய்யும் எல்லாம்**
**தொழிற்பால வாம்மற்றுஇவ் உடலம்செய் தொழிலும்**
**சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே.**

கண்ணாடியில் தோன்றும் உருவம் கைகளையும் கால்களையும் நீட்டுவது மடக்குவது ஆகிய எல்லாச் செயல்களையும் பிரதிபலிக்கும். அச் செயல்கலெல்லாம் கண்ணாடியின் முன் நிற்பவனின் செயல்களாம். அதுபோல, இவ்வுடல் செய்யும் எல்லாச் செயல்களும் ஒளி பொருந்திய ஞான வடிவான ஆத்மாவின் சன்னிதானத்தில் நிகழும் செயல்களாம்.

**51.** **அறிகின்ற பொருள்என்றும் அறிவானில் வேறே**
**ஆனால்இவ் வூன்ஆக நான்என்ன லாமோ**
**செறிகின்ற புள்அல்ல வேகூடுஇவ் வகையே**
**செட்மான உடல்நின்னில் வேறுஎன்று தெளியே.**

காணப்படும் பொருள்வேறு. காண்பவன் வேறு என்று தெரியும்போது, இந்தத் தசைமயமான உடல் நான் என்று கூறுதல் பொருந்துமா? கூட்டில் வசிக்கின்ற பறவையும் கூடும் வெவ்வேறானவை அல்லவா? இவ்வாறே சடமான உடல் நீ அல்ல என்று அறிவாயாக.

**52.** **நிலம் ஆகும் வற்புஎன்ற நெகிழ்கின்ற நீர்ஆம்**
**நெருப்புஆம்இ தில்சுட்ட எல்லாமும் அநிலம்**
**சலம்ஆன புரையான வான்இந்த உடலம்**
**சடமான ஐம்பூத உருவங்கள் தாமே.**

பூத உடலில் கடினமாக அமைந்ததெல்லாம் நிலம், நெகிழ்ந்து ஓடுவதெல்லாம் நீர், உஷ்ணத்தைத் தருவது நெருப்பு, சலனங்கள் உள்ளது காற்று, துவாரங்கள் ஆகாசம். அதனால் இந்த ஜடமான உடல் ஐம்பூதங்களின் சேர்க்கையால் உண்டான வடிவம் என்று தெளிவாயாக.

53. விழியைப்பு மான்என்னில் ரவிஆதி யாலே
விளங்குகின்றது அல்லால்வி ளங்காமை யாலே
ஒழியப்ப டும்கன்னம் முதல்நாலும் உன்றன்
உருக்கண்ட கண்தன்னை ஒப்பாக உன்னே.

பார்க்கின்ற, இந்தக் கண்கள்தான் நான் என்று கூறுவாயானால் சூரியனின் ஒளி மற்ற சந்திரன், விண்மீன்கள் மின்னல் முதலிய ஒளிகள் இல்லாமல் பார்க்க முடியாது. அதேபோல மெய் வாய் மூக்கு செவி இவையும் நான் அல்ல என்று உணர்வாயாக. பார்ப்பது நான் அல்ல, கேட்பது நான் அல்ல, சுவைப்பது நான் அல்ல, முகர்வது நான் அல்ல, தொட்டு உணர்வது நான் அல்ல என்று நிச்சயம் செய்து கொள்.

(ஞானேந்திரியங்களில் முதன்மையானது கண்கள், கர்மேந்திரியங்களில் முதன்மையானது வாக்கு)

54. அழல்உண்பொருள் களில்உண்பவை முக்கூறுஅதின் முதல்கூறு
அணிஎன்புந டுக்கூறுஅது மச்சைக்குஅணி ஆகும்
எழில்கொண்டக டைக்கூறுஅது வாக்குஆய்எழும் என்றே
இயல்நான்மறை அந்தங்கள்இ சைக்கின்றன வாமே.

உணவை ஜீரணிப்பது அக்கினி. அந்த ஜாடராக்கினியில் ஆகுதி யாகும் கொழுப்புப் பொருள்கள் (நெய் முதலியன) மூன்று பகுதிகளாகப் பிரியும். முதல் பகுதி எலும்புகளைச் சேரும். இரண்டாவது கூறு மூளையின் தசைகளைச் சென்று அடையும். கடைசி பாகம் நன்மைதரும் பேச்சாக, அழகிய வாக்காக வடிவம் கொள்ளும். இதை வேதங்களின் முடிவான உபநிடதங்கள் அறுதியிட்டுச் சொல்கின்றன. எலும்பும் மூளையும் ஆத்மா ஆகாது. அதுபோல வாக்கும் ஆத்மா ஆகாது.

55. உண்ணும்புனல் முக்கூறுஅதில் முதல்கூறுஉவர் நீராம்
உதிரம்நடு வில்கூறுக டைக்கூறுபி ராணன்
எண்ணும்இதில் இருகூறுஅவை நீஆயிடின் அன்றோ
இறுகின்றபி ராணன்அது நீயாகுவை இசையே.

உண்ணும் நீரும் மூன்று பகுதியாம். அவற்றுள் முதல் பகுதி சிறு நீராகும். நடுக் கூறு இரத்தம். கடைக்கூறு பிராணன். எண்ணப்படும் இவற்றுள் சிறுநீரும் இரத்தமும் ஆகிய இரு பாகங்களும் உனது வடிவமாயின் அல்லவா அழிகின்ற பிராணனாக நீ ஆவாய்.

56. பிராணனும் அல்லதுஞ்சில் உணர்வுஇன்மை யால் அஃது
உணரும்பு லன்கள் ஒழிவால்
பிராணன்அது என்னில்மன்னை ஒழியாது சேனை
நகர்சூழ்வ லம்செய் பொழுதே.

தூங்கும் போது ஐம்புலன்களும் ஒடுங்கிவிடுகின்றன. பிராணன் மட்டும் இயங்கிக் கொண்டிருக்கிறது. ஆயினும் பிராணன் புலன்களை அறியாமல் உறங்குவதால் பிராணனும் ஆத்மா அல்ல.

57. கரணம்ஒ டுங்கவாயு நிகழ்வுஎன்கொல் என்னின்
உடல்காவல் ஆகும் அலதேல்
மரணம் அடைந்ததுஎன்று தமர்சுட்டி டாமுன்
வளைவாலின் ஞாளி கொளுமே.

தூக்கத்தில் அந்தக் கரணமும் மற்ற புலன்களும் ஒடுங்கி விடுகின்றன. ஆனால் பிராணன் இயங்கிக் கொண்டிருக்கிறது. நாசியின்மூலம் மூச்சுமட்டும் இயங்கிக் கொண்டிருக்கும். மூச்சும் நின்றுவிட்டால் பிராணன் போய்விட்டது என்று உறவினர்கள் காட்டில் கொண்டு போய் எரித்து விடுவார்கள். மூச்சு இருக்கும் வரை நாய் உடலை புசிக்காது. உயிரற்ற உடலை நாய் புசிக்கும். இந்த ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றவே அந்தக்கரணம் ஒடுங்கி உடல் தூங்கினாலும் மூச்சுமட்டும் இயங்கிக்கொண்டு உடலில் பிராணன் இருக்கும்படி இறைவன் பாதுகாப்பளித்திருக்கிறார்.

58. இனம்உற எண்ணவுள்ள கரணத்தில் ஒன்றுஇது
எனலால் இதுஎன்னது எனலால்
மனம்முனம் அன்னம்என்ற அதனாலும் அல்ல
மதிஅல்ல அந்த வகையே.

(மனம், சித்தம், புத்தி, அகங்காரம் இந்த நான்கையும் பற்றிச் சொல்லத் தொடங்குகிறார்) கூட்டமாக உள்ள அந்தக்கரணத்தில் மனம் ஒன்று என்று அறிவோம். என்னுடைய மனம் என்று கூறுவதாலும், அன்னத்தின் சூட்சும பாகம் மனம் என்று முன்னமேயே சொல்லப்பட்டிருப்பதாலும், மனம் ஆத்மா அல்ல என்பது தெளிவு. புத்தியும் அவ்வாறே ஆத்மா அல்ல. (மனமும் புத்தியும் ஆத்மா அல்ல என்று வலியுறுத்தப்படுகிறது.)

59. இடர்இன்பு உளதாய் நிலையற்று அறிவற்று
எண்ணும் கரணங் களில்ஆய் எவரும்
அடரும் பிறவிக்கு அடிஎன்று உணரும்
அகங்கா ரமும்நீ அலஎன்று அறியே.

துன்பத்தையும் இன்பத்தையும் உடையதும், நிலையற்றதும், சடமாயும் கருதப்படும் அகங்காரம் அந்தக் கரணங்களில் ஒன்று. அகங்காரமே மாறி மாறி வரும் பிறவிகளுக்குக் காரணம் ஆகிறது. இதை உணர்ந்தால் அகங்காரமும் நீ அல்ல என்று தெளிவு பெறுவாய்.

(நான், எனது என்ற பற்று ஏற்படக் காரணமாக இருப்பது அகங்காரம். அதனால் அகங்காரமும் நீ அல்ல என்று வலியுறுத்தப்படுகிறது.)

60. ஐயப் படல்ஓர் பொருள்நிச் சயமாய்
அறியப் படல்யான் எனதுஎன் றுமதம்
செய்யப் படல்செய் வதுசிந் தனையாம்
சித்தம் அதுஅன்று எனநீ தெளியே.

ஒரு பொருள்பற்றி சந்தேகப்படுவதையும், அது இதுவே என்று துணியப்படுவதையும், நான், என்னுடையது என்று அபிமானம் கொள்ளுதலையும் சிந்திப்பதே சித்தம். அந்தச் சித்தம் நீ அல்ல என்று உணர்வாயாக.

61. முன்ஆ கஉடம்பு அதுசித் தம்அதே
முடிவாக மொழிந்த பொருள்தி ரள்தான்
நின்ஆ கிலநீ அறியும் பொருளாய்
நிகழ்கின் றதனால் எனநின் மலனே.

“தேகம் முதல் சித்தம் முடிய விளக்கிக் கூறிய பொருள்களின் கூட்டம்தான் ‘நான்’ என்பதாக நீ எண்ணிக் கொண்டிருக்கிறாயே, இந்த ஏழும் உன் வடிவம் அல்ல. ஏன் என்றால் இவை உன்னால் உணரப்படுகின்ற பொருள்கள். அதனால் இவை உன் வடிவம் அல்ல” என்று புனிதரான நந்தி பராயணர் சசிவன்னனுக்கு எடுத்துச் சொன்னார்.

(காரியசப்த உபாதிகள் என்று வேதாந்த மொழியில் கூறப்படுவன ஏழு. 1. தேகம், 2.இந்திரியங்கள், 3. பிராணன், 4. மனம், 5. புத்தி, 6. சித்தம், 7. அகங்காரம் இவை எதுவுமே ‘நான்’ அல்ல என்பது கருத்து)

62. உன்னால் அறியப் படும்யா வையும்உன்
உருவன்று எனஓ தினைஒக் கும்எனக்கு
என்னால் அறியாது ஒழியும் பொருளோ
யான்ஆ குவதுஎன் றனன்என் றலுமே.

உன்னால் உணரப்படும் எல்லாப் பொருள்களும் உனது வடிவம் அல்ல என்று உரைத்தருளினீர். அடியேனுக்கும் அது சம்மதமே. என்னால் உணரப்படாது இருக்கின்ற "நான்" என்ற ஒன்று உண்டோ எனச் சசிவன்னன் வினவினான். உடனே நந்தி பராயணர் சொல்லத் தொடங்கினார்.

63. அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்து
அறியும் பொருள்கா ரியமாம் உலகுஇந்
நெறியால் திகழ்நான் மறைஅந் தம்எலாம்
நீஅன்று எனவோ துநிரந் தரமே.

உணர முடியாத பொருள் காரண மாயை. சுட்டி உணரப் படுகின்ற பொருள் காரியமான உலகம். இது கல், இது மரம், இது மலை, இது நெருப்பு, இது வானம் என்று சுட்டிக் காட்டி உணரக்கூடியது காரிய மாயையாகிய பிரபஞ்சம். ஒவ்வொரு பொருளுக்கும் காரணம் இருக்கிறது. காரியம் பிறக்கிறது. (தங்கம் காரணம், ஆபரணம் காரியம் அதுபோல மாயை காரணம், பிரபஞ்சம் காரியம்)

"இந்தக் காரணம் காரியம் இரண்டுமே நீ அல்ல, இவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டது ஆன்மா" என்று வேதங்களின் முடிவான உபநிஷத்துக்கள் நிச்சயமாகக் கூறுகின்றன.

64. அறியும் பொருள் அன்று அறியாப் பொருளன்று
அறிவா கியநீ எனும்அப் பொருள்தான்
பொறியின் வழிநின்று அறியும் பொருளோ
போதக் கண்விழித்து அறியும் பொருளே.

அறியும் பொருளான காரியம், அறிய முடியாத மாயையான காரணம் இரண்டுமே நீ அல்ல. நீ அறிவு வடிவம். 'நீ' என்ற அந்தப் பொருளை புலன்களின் வழியாக (ஞானேந்திரியங்கள் வழியாக) அறிந்து கொள்ள முடியாது. ஞானம் என்ற கண் திறந்தால்தான் அதை அறியலாம்.

65. வேதப் பொருள்தான் இதுவே றுசொலும்
வினையா வையும்அன்று ஒருவே றும்இலாப்
போதப் பொருள்அந் தமறைக்கு அணியாம்
புனிதப் பொருள்தத் வமசிப் பொருளே.

இப்பொழுது கூறியது வேதத்தின் சிறந்த பொருள். இதற்கு வேறான கர்ம உபாசனைகள் எதுவும் சிறந்த பொருள் அல்ல. வேறுபாடு இல்லாத அறிவு வடிவமான பொருளும், வேதத்துக்கே அலங்காரமாக விளங்குவதும் "தத்வமசி" என்ற மகா வாக்கியப் பொருளே. புனிதமான பொருளும் அதுவே.

66. நிமலம் ஆம்பரம் அது எனும்பொருள்
நீஎ னும்பொருள் சீவனே
அமலம் ஆனஇ ரண்டு ஐக்கியம்
அசிப தப்பொருள் ஆவதே.

'தத்' என்ற சொல்லினது பொருள் களங்கமற்ற நிர்மலமான ஈசுவரன் என்பதே. 'த்வம்' என்ற சொல்லின் பொருள் சீவன் ஆகும். 'அசி' என்ற சொல்லின் பொருள் இருக்கின்றாய் என்பதே. குற்றமில்லாத ஈசுவரனும் சீவனும் ஒன்றே என்பதாம்.

67. அருமை ஆகிய பிரமம் முன்னிலை
ஆகும் ஆருயிர் பின்னிலை
இருமை ஆனஇ ரண்டு ஐக்கியம்
எய்தும் ஆறுஎவன் என்னவே.

"எளிதில் அடைவதற்கு அரிதான பிரம்மம் கண்முன் தெரியாமல் மறைந்திருக்கும் பொருள் ஆகும். சீவர்கள் கண்ணுக்குத் தெரிவன. எனவே இவ்விரு வகையான அறங்களால் வேறுபட்ட சீவனும் பிரம்மமும் ஒன்று ஆவது எந்த வழியில்? காணாததற்கும் காண்பதற்கும் எவ்வாறு ஐக்கியம் ஏற்படும்?" என்று சசிவன்னன் கேட்க நந்தி பராயணர் கூறத் தொடங்கினார்.

68. உபாதி யால்வரு பேத மேஇவர்
பேதம் அன்றுஉரு உயிரினின்
கபஆதி யாம்உடல் போல்இ றைக்குள
காரண ஆதிகள் காயமே.

ஈசுவரனுக்கும் சீவனுக்கும் உள்ள வேறுபாடுகள் உபாதிகளால் உண்டானதே. வடிவத்தினால் அல்ல. சீவனுக்குக் கபம் வாதம் பித்தம் இவற்றால் கூடிய உடல் இருக்கிறது. (காரிய சப்த உபாதிகள் சீவனுக்கு இருப்பதை 61 ஆவது பாடலில் சொன்னார்) அதுபோல ஈசனுக்குக் காரண சப்த உபாதிகள் காயமாக இருக்கிறது. (காரண சப்த உபாதிகளை வரும் பாடலில் விளக்குகிறார்.)

**69.** **ஈசன் முற்றுஅறி வான்வி யாபி**
**எவைக்கும் ஏதுஇ யம்பும்ஆ**
**காச கன்நிரு பாதி பாவனை**
**காரண ஆதிகள் ஆவதே.**

எல்லாவற்றிற்கும் மேலானவன், முழுதும் அறிபவன், எங்கும் நிறைந்தவன், எல்லாவற்றிற்கும் காரணம் ஆனவன், எல்லாவற்றையும் படைப்பவன், அனைத்தையும் காப்பவன், அனைத்தையும் அழிப்பவன் ஆகிய இவை ஏழும் ஈசுவரனுக்கு உரிய காரண சப்த உபாதிகள் எனப்படும்.

**70.** **நீதி யால்இரு உபாதி நீக்கிட**
**நீஎ னச்சொல்ப தத்தினும்**
**ஆதி ஆகிய தற்ப* தத்தும்**
**அசுத்த சுத்தம்உ ரைத்துமே.**

('தத் த்வம் அஸி' என்ற மகா வாக்கியத்தின் பொருளை விளக்கத் தொடங்குகிறார்). சாத்திரங்கள் விளக்கும் இரண்டு உபாதிகளையும் நீக்கும் பொருட்டு 'த்வம்' என்ற சொல்லிலும் அவ்வாக்கியத்தில் முதலாவதாகிய 'தத்' என்ற சொல்லிலும் உள்ள மாசு, தூய்மை இரண்டையும் கூறுகிறேன்.

**71.** **ஆகம் முன்திகழ் ஏழும் நான்எனல்**
**தொம்ப* தத்தில்அ சுத்தமே**
**சோகம் இன்றிய சான்று நான்எனல்**
**தொம்ப தப்பொருள் சுத்தமே.**

உடல் முதலாகத் திகழ்கின்ற ஏழு உபாதிகளையும் (சீவனுக்கு உள்ள காரிய சப்த உபாதிகள்) ஆத்மா என்று சொல்லுதல், 'த்வம்' என்னும் சொல்லிலுள்ள அசுத்தமாகும்.

---

* *தற்பதம் - தத் என்ற வட மொழிச் சொல் - அது.*
* *தொம் பதம் - த்வம் என்ற வட மொழிச் சொல் - நீ.*

துக்கம் நீங்கிய சாட்சியே ஆத்மா என்று கொள்ளுதல் த்வம் என்ற சொல்லிடத்திலுள்ள சுத்தமாகும். 'நான் கர்த்தா' 'நான் போக்தா' என்ற நினைவு 'த்வம்' என்ற பதத்தில் அசுத்தம். 'நான் ஏழு உபாதிகளுக்கும் சாட்சியாக மட்டும் இருக்கிறேன்' என்ற பாவனை சுத்தம்.

**72. அகில காரணம் ஆதி நான்எனல்**
**தற்ப தத்தில்அ சுத்தமே**
**சகல காரண சான்று நான்எனல்**
**தற்ப தப்பொருள் சுத்தமே.**

காரண சப்த உபாதிகளுடன் கூடியிருக்கும் போது அந்த அறிவு சொரூபத்தை பிரம்மம் என்று கூறுதல் அசுத்தம். அதாவது 'தத்' என்ற சொல்லில் அசுத்தம்.

காரண சப்த உபாதிகள் ஏழுக்கும் சர்வ சாட்சியாக உள்ள அறிவு சொரூபம் மாத்திரமே பிரம்மம் என்பது 'தத்' என்ற பதத்தில் உள்ள சுத்தமான பொருளாகும்.

**73. செறிந்த காரண காரி யங்கள்**
**சிதைந்து மேல்உறு சித்ததாய்**
**அறிந்த வாதனை தானும் அற்றதுஅவ்**
**அசிப தப்பொருள் ஆவதே.**

காரண சப்த உபாதிகள், காரிய சப்த உபாதிகள் விசாரத்தால் நாசமடைந்து, பின் எஞ்சியுள்ள கூடஸ்தனும் பிரம்மமும் ஒன்றே என உணர்ந்த பின், அவ்வாறு உணர்ந்த அந்த வாசனையும் நீங்கியதுவே முன்னர்க் கூறிய 'இருக்கின்றாய்' என்னும் 'அசி' பதத்திற்குப் பொருளாகும்.

**74. அசுத்தம் ஆகியது இருப தத்தினும்**
**முக்கி யப்பொருள் ஆகுமே**
**விசுத்தம் ஆனதுஇ லக்கி யப்பொருள்**
**என்று சொல்லுவர் விமலரே.**

'தத், த்வம்' என்ற இரண்டு சொல்லின் இடத்தும் உள்ள அசுத்தம் ஆகிய பொருளை முக்கியப் பொருள் அல்லது சொற்பொருள் என்று கூறுவர். சுத்தமான பொருளையே இலட்சியப் பொருள் என்று பெரியோர் கூறுவர்.

**75. முரண்ட சீவப ரங்கள் தம்முடல்**
**முக்கி யப்பொருள் ஆவதே**

**இரண்டில் வேறுஅறு சிற்சொ ரூபம்**
**இலக்கி யப்பொருள் ஆவதே.**

ஈசவர உபாதிகள் வேறு, சீவனுடைய உபாதிகள் வேறு, இந்த இரண்டும் முக்கியார்த்தம் எனப்படும். இதில் ஐக்கியம் கூடாது. ஈசுவரனிடத்திலும் சீவனிடத்திலும் உள்ள அறிவு வடிவமான "சித் சொரூபமே" இலட்சியார்த்தம் எனப்படும். அறிவு சொரூபம் இரண்டிலும் வேறுபடாமல் இருப்பதால் ஐக்கியம் கூடும்.

**76.** **ஊக்கி யப்பர சீவர் தங்கள்**
**உடம்பு இரண்டும் இலக்கணா**
**வாக்கி யப்படி நீக்கி னால்ஒரு**
**வத்து வேபர வத்துவே.**

உயர்வினையுடைய ஈசுவரன், சீவன் ஆகிய இவர்தம் உடல்கள் இரண்டையும் இலட்சணா வாக்கியப்படி நீக்கினால் பிரம்மம் என்ற ஒரு பொருளே உள்ளதாம். ஈசுவரன், சீவன் இரண்டுக்கும் உபாதிகள் உள்ளபடியால் உடம்பு என்று கூறுகிறார். இந்த இரண்டும் விட்டுவிடாத இலட்சணையின் மூலம் ஒன்றே என்ற ஞானம் பிறந்து விட்டால் (உபாதிகளை நீக்கிவிட்டால்) ஒரே வஸ்துவான பிரம்மம்தான் இருக்கும். (ஈசுவரன், சீவன் இரண்டல்ல ஒன்றே என்பது கருத்து.)

**77.** **ஓரில் விட்டதும் விட்டி டாததும்**
**உபய மும்என உணர்வுஉளோர்**
**தேரில்இ லக்கணை திரிவி தத்தில்**
**இசைப்பர் மற்றது இயம்புவாம்.**

ஆராய்ந்து பார்க்குமிடத்து விட்டது, விடாதது, விட்டுவிடாதது என்று பெரியோர் இலட்சணையினை மூவகைத்தாகக் கூறுவர். நாம் அதனை விளக்கமாகக் கூறுவாம்.

**78.** **மஞ்சு கூப்பிடுது என்றல் போலவும்**
**வடப கீரதி உள்ளதே**
**விஞ்சு கோஷம்*அது என்றல் போலவும்**
**விட்ட லக்கணை ஆவதே.**

---

* *கங்காயாம் கோஷஹ என்ற வட மொழி வாக்கியம்.*

கட்டில் கூப்பிடுகிறது என்றால் கட்டிலில் படுத்திருப்பவர் அழைக்கிறார் என்று பொருள்கொள்ள வேண்டும். அதுபோல "கங்கையில் கோஷம்" என்றால் கங்கைக்கரையில் உள்ள கிராமம் என்றுதான் பொருள். இதுபோல் உள்ளர்த்தம் உடையது விட்ட இலட்சணை.

**79.** **சிவலை நின்றது வெள்ளை போயினது**
**என்று செப்புதல் போலவே**
**கவலை இன்றிவி டாத லக்கணை**
**என்று நீ கொள் கருத்திலே.**

விடாத இலட்சணை என்பது, "சிவப்பு மாடு கொட்டிலில் நிற்கிறது! வெள்ளைமாடு மேயப்போய்விட்டது" என்ற செய்தியை, "செவலை நிற்கிறது. வெள்ளை போய்விட்டது" என்று சொல்வது போலவாம். நீ இதை உன் மனத்தில் நன்றாகப் பதித்துக்கொள். ஏ மாம்பழம் என்று கூப்பிட்டால் பழமா வருகிறது. பழம் விற்பவன் வருகிறான். அதுபோல சொன்ன சொல்லோடு குறிப்பிடாத ஒரு அர்த்தத்தைச் சேர்த்துச் சொல்வது விடாத இலட்சணை.

**80.** **மேவும் விட்டுவி டாத லக்கணை**
**மெய்ம்மை யாதுஎனில் அந்தஇத்**
**தேவ தத்தன்எ னும்பொ ருள்படி**
**சிந்தை செய்திடு தீரவே.**

மகா வாக்கியமான "தத் த்வம் அஸி" என்ற கருத்தை விட்டு விடாத இலட்சணையினால் புரிந்து கொள்ள முடியும். அது எப்படி? "அதுவே நீயாக இருக்கிறாய்" என்று சொல்வதை "அந்த தேவதத்தனே இவன்" என்று சொல்வதைப் போல என்று புரிந்து கொள்.

**81.** **விட்ட லக்கணை தனையும் விட்டுவி**
**டாத லக்கணை தனையும்நீ**
**விட்டு விட்டுவி டாத லக்கணை**
**யால்வி ளங்குவி ளங்கவே.**

விட்ட இலட்சணை தன்னையும், அது மகா வாக்கியத்திற்கு உபயோகம் இன்மையினால் நீக்கி, விடாத இலட்சணை தனையும் நீக்கி, விட்டு விடாத

இலட்சணையின் மூலம் உன் வடிவினை நன்றாக அறிவாயாக. (அறிவு வடிவமான சாட்சி பாவத்தை ஏற்றுக்கொண்டு பிரம்ம சொரூபமாக இருக்கிறேன் என்று உணர்வாயாக, என்பது கருத்து.)

**82. போது மேவிய தேசம் விட்டுஒரு**
**புருட னைக்கொளும் ஆறுபோல்**
**ஓதும் ஈருடல் கண்டு விட்டதன்**
**உண்மை காண உணர்ந்திடே.**

பார்த்த காலத்தையும், பார்த்த இடத்தையும் விட்டு வேறு ஒரு இடத்தில், பல ஆண்டுகளுக்குப் பின் பார்க்கும் ஒரு புருடனை "அவனே இவன்" என்று தெளிவது போல, ஈசுவரனும் சீவனும் 'இரண்டு' என்ற தன்மையை நீக்கிவிட்டு அந்த மகா வாக்கியத்தின் உண்மையை உணர்ந்துகொள்.

(தேவதத்தனும் கோவிந்தனும் பிரிந்து போனார்கள். பல ஆண்டுகள் சென்றபிறகு வேறு ஒரு ஊரில், வேறு சூழ்நிலையில் சந்தித்தபோது "அதே தேவதத்தனா இவன்?" என்று கோவிந்தன் சந்தேகப்பட்டான். பிறகு, "ஆமாம் அவனேதான் இவன்" என்று தெளிந்தான். அது போல 'அது, இது', 'ஈசுவரன்', 'சீவன்', என்ற பேதம் நீங்கி 'தத்வமஸி' என்ற மகாவாக்கியத்தின் பொருளை உணர்வாயாக)

**83. பிரியா உயிர்கா ரியமாம் உடலும்**
**பிரமத்து உறுகா ரணமாம் உடலும்**
**கரிஆ கியவா தனையும் கழியக்**
**காட்டும் படிகண் டுகொள்கண் உறவே.**

சீவனுக்குள்ள காரிய சப்த உபாதிகளையும், ஈசுவரனுக்குள்ள காரண சப்த உபாதிகளையும் நீக்கிவிட வேண்டும். உபாதிகளை நீக்கிய பிறகு "சாட்சி" என்ற வாசனையையும் துறந்து விடவேண்டும். சாட்சி பாவத்தையும் நீக்கிவிட்டு நான் உபதேசிக்கும் சீவபிரம்ம ஏகத்துவத்தை உணர்வாயாக. (சீவனும் பிரம்மமும் ஒன்று என்பது கருத்து)

(சீவனும் சுழுத்தி நிலையில் சச்சிதானந்த வடிவமாகத்தான் இருக்கிறான். ஈசனும் சச்சிதானந்தவடிவமே. ஈசன் பஞ்ச கிருத்தியங்களுக்கும் (ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) சாட்சியாக இருக்கிறான். சீவனும் உண்மை வடிவத்தில் சச்சிதானந்த சொரூபியாய்த்தான் இருக்கிறான். நாம ரூபம் நீங்கினால் பிரம்ம சொரூபம்தான். இதுவே சீவனின் உண்மையான நிலை. சுருதியும் சீவன் "சச்சிதானந்த

வடிவமே'' என்கிறது. சீவன் பிரம்ம சொரூபத்திலிருந்து வகுக்கப்பட்ட ஒரு சிறு பாகம் அல்ல என்பது வேதாந்தத்தின் முடிவு. உபாதிகளை நீக்கினால் அபின்னம். சீவன் பிரம்மம் இவை வேறு வேறல்ல ''ஒன்றே'' என்று விளக்கப்பட்டது)

**84.** **கரணத் திரள்நிற் பினும்அப் பொருளைக்**
**காணக் கிடையாது அவைகை அறவே**
**மரணப் படினும் அதுகண் டுகொளும்**
**வழிஇல் லைஎனும் படிநீ மதியே.**

கரணங்களின் கூட்டம் பொருந்தி இருந்தாலும், நினைவு நிலையில் அந்தப் பொருளை, அதாவது முற்கூறிய பிரம்மத்தை காணுதற்கியலாது. அக்கரணங்கள் நீங்கி நாசத்தினை அடைகின்ற சுழுத்தி அவத்தையிலும் அப்பொருளை அறிந்து கொள்ள வழியில்லை என்பதை நீ அறிக.

**85.** **எந்தக் கரணங் களும்மே வல்நனா**
**இதில்வா தனையால் விடயங் களொடே**
**அந்தக் கரணங் கள்பொருந் தல்கனா**
**அவைமாய் தல்சுழுத் தியவத் தையதே.**

எல்லா இந்திரியங்களும் இயங்கும் நிலை நனவு. இந்திரியங்கள் செயலற்று உறங்கும் பொழுது நினைவில் பெற்ற வாசனைகளினால் கனவு தோன்றுகிறது. இந்த இரண்டுமே ஒடுங்கி மாய்ந்த ஆழ்ந்த உறக்கமே சுழுத்தி எனப்படும். தூல உடலுக்கே விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளும் உண்டு.

**86.** **வினவில்ப ரத்தைஅறிவு உறுதற்கு**
**அவத்தைபுலன் வினைமாறியே**
**நனவில்சு ழுத்திநிலை வரின்அப்**
**பொருள்திகழும் நலம்ஆகவே.**

பரம் பொருளை எப்படி அறிவது என்று கேட்டால் புலன்களின் செயல்பாடுகள் ஒடுங்கி உலகத்தில் நடக்கும் எதுவுமே பாதிக்காத நனவில் சுழுத்தி நிலையை அடைந்தால் அந்தப் பொருள் இயல்பாகவே விளங்கும்.

(சரீரத்துக்கு ஆழ்ந்த உறக்கம் சுழுத்தி நிலை. அந்த மாதிரியான அமைதி நிலையானது உலகத்தில் செயல் பட்டுக் கொண்டிருக்கும்போதுகூட மனது உலக இயல்புகளிலிருந்து விடுபட்டுப் பற்றுக்கள் பாதிக்காமல், மனச்சலனம் இல்லாமலிருக்கும்

அரிய நிலை. இதுவே நனவில் சுழுத்தி. இதைத் துரிய நிலை என்று சொல்வதுண்டு. சாதகன் அடைய வேண்டிய மெய் ஞான அனுபவம் இதுவே)

**87.** **திவிதத்து அவத்தைகளை அறிவுஉற்ற**
**அத்துரியநிலை சீவனே**
**இவிதத்தில் அப்புருடன் நனவுற்ற**
**அத்துரியநிலை ஈசனே.**

மூன்று விதமான அவத்தைகள் சீவனுக்கு உண்டு. சீவன் இந்த மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்ட துரிய நிலையில் சீவசாட்சியாகிய "கூடஸ்தன்" எனப்படுவான். ஈசுவரனுக்கும் மூன்று அவத்தைகள் உண்டு. ஈசுவரன் மூன்று நிலைகளையும் கடந்த துரிய நிலையில் ஈசுவர சாட்சியாகிய பிரம்மம் எனப்படுகிறான். (சீவன் துரிய நியில் புருவ மத்தியை அடைந்து விடுகிறது. துரிய நிலையில், தூங்கும் போது சரீரம் விழுவது போல் விழுவதில்லை)

**88.** **அகிலக்க ரிப்பரம துரியப்பொ**
**ருள்துரியம் அதுஆகையே**
**புகல்உற்ற தத்வமசி எனும்முப்ப**
**தத்தின்முடி பொருள்ஆவதே.**

(கிலம் என்றால் குறைவு. அகிலம் என்றால் குறைவற்றது. எங்கும் நிறைந்த பொருள்) அகிலக்கரிப்பரமம் என்றால் சர்வ சாட்சியாகிய பிரம்மம். துரியாவத்தையில் தான் அந்தப் பரத்தை அறிய முடியும்*. அப்படித் துரியத்தில் உணர்ந்த பொருளே 'தத் த்வம் அஸி' என்ற மூன்று பதங்களின் முடிவான பொருள். ஈசன் சீவன் என்ற பேதம் அற்ற நிலை.

**89.** **நிமலப்பொ ருள்சுருதி நெறியில்**
**பெறக்கருணை நிதிகூறவே**
**அமலப்பொ ருள்பெறுதல் அருமைத்து**
**எனக்கழறி அடிவீழவே.**

நிர்மலமான பிரம்மத்தை வேத நெறியின் முறைப்படி அடையுமாறு கருணை நிதியாகிய நந்தி பராயணர் உரை செய்ய, "சுத்தப் பிரம்மத்தை அடைதல் அடியேனுக்கு

* *ஈசுவரனின் துரிய நிலையில் விளங்குவது சர்வ சாட்சியாகிய பரப்பிரம்மம். சீவனின் துரிய நிலையில் விளங்குவது சாட்சியாகிய கூடஸ்தன். இவை இரண்டும் ஒன்றே.*

இயலாது" என்று சசிவன்னன் கூறி அவர் திருவடிகளை வணங்கிட கருணையே வடிவான நந்தி பராயணர் உரைக்கத் தொடங்கினார்.

**90.** **தமரக்க லைக்குஅளவு தெரிவுஅற்ற**
**தத்பொருள்அ தனைஈகுவான்**
**அமரர்க்குஅ ளப்புஅரிய பதம்நல்பு**
**னல்கொடுசெய்து அபிடேகமே.**

ஒலி வடிவாய் இருக்கின்ற வேதங்களால் அறியப்படாத பரம்பொருளை சசிவன்னன் அறியும்* பொருட்டு குருவானவர் தீக்ஷைகள் செய்யத் தொடங்கினார். முதலில் சசிவன்னன் தனது குருவான நந்திபராயணரின் பாதங்களைக்கழுவி பூஜை செய்த நீரால் அவனை நீராட்டினார்.

**91.** **பவளத்தில் வைத்தஅமிர் தின்இன்மிச்சில்***
**இட்டுஇனிய பரிவோடுமா**
**தவளப்பொ டிக்கவசம் எனவிட்டு**
**உடல்பகைகள் தலைசாயவே.**

குருநாதரின் பவழம்போல் சிவந்த இதழ்களால் சுவைக்கப்பட்ட (எச்சில்) அமுதமாகிய உணவைப் பிரசாதமாகச் சசிவன்னனுக்கு அளித்தார். (சற்குரு உண்டு மிகுந்த எச்சில் பிரசாதம் தேவாம்ருதத்தைவிட சிறப்புடையது. பரிகலசேஷம்) உடலில் உள்ள பகைகள் நீங்கும்படி கவசம் போலத் திருநீறு பூசினார். (அகங்கார மமகாரங்களும் காரிய சப்த உபாதிகளும் நீங்கும்படி அருளினார்)

**92.** **உதகத்து உடல்பொருளொடு உயிர்கைக்கொடு**
**உச்சிமிசை ஒருபோதொடே**
**பதகத்த லத்தைவிட இருகைத்**
**தலத்தொடுஇரு பதம்மேவியே.**

ஞானாசிரியரான நந்தி பராயணர் தண்ணீரைத் தன் கையில் வார்த்து உடல் பொருள் ஆவி மூன்றையும் தன்னிடத்தில் ஒப்படைக்கச் செய்தார். ஏற்றுக் கொண்டு அவனுடைய சிரத்தில் ஒரு மலரை வைத்து இருகரங்களையும் வைத்து ஆசீர்வதித்தார். பிறகு தனது இரண்டு திருவடிகளையும் அவனுடைய சிரத்தில் பதித்துத் திருவடி தீக்ஷை தந்து அருளினார்.

---

* *மிச்சில் = எச்சில்.*

93. ஒழியப்பு லக்கண்உப நிடதப்
பொருள்தெரிய உளஞானமாம்
விழியைக்கொ டுத்துமொழி எனமுப்ப
தப்பொருளும் வெளிஆகவே.

இந்திரிய சுக ஆசைகள் ஒழியும்படி, உப நிடதங்களின் முடிவான பொருள் தெளிவாகும்படியாக சசிவன்னனுக்கு ஞான திருட்டியை அருளினார். "இப்போது நீ முப்பதமான 'தத் த்வம் அஸி' என்ற மகா வாக்கியத்தின் பொருளை உணர்ந்தபடி சொல்வாயாக" என்று ஆணையிட்டார்.

94. நனவைத்து வக்கிமுடி துரியத்தை
முற்றஇறை நவில்நீதியே
மனவர்க்கம் அற்றஅனு பவம்உற்ற
சித்ககன வலிஓதுமே.

சாக்கிராவத்தையான விழிப்பு நிலை தொடங்கி துரியம் என்ற நிலை முடிய குருநாதர் கூறிய வழி முறைகளைப் பின்பற்றித் தான் பெற்ற அனுபவத்தைச் சொல்லத் தொடங்கினான். மனம் முதலிய அந்தக் கரணங்கள் அடியோடு மறைந்த அற்புதமான ஐக்கிய நிலையை எங்கும் நிறைந்த பரம்பொருளில் ஆழ்ந்த அனுபவத்தை எடுத்துக் கூறினான்.

95. புரணம் ஆகவே புறம்உள
புலன்களும் அந்தக்
கரணம் யாவையும் வழங்கிடம்
நனவுஎனக் கண்டேன்.

வெளிப்புறமாகச் செல்லும்படியான ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் என்ற பத்துப்புலன்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்று பிரிக்கப் படுகின்ற அந்தக்கரணமும் ஆகிய எல்லாமே தம் தம் இடங்களில் இருந்து கொண்டு செயல்படுகின்ற நிலையே சீவனுடைய விழிப்பு நிலை என்று உணர்ந்தேன்.

96. புரணம் ஆகிய புறம்புஉள
புலன்கெட அந்தக்
கரணம் யாவையும் வழங்குஇடம்
கனவுஎனக் கண்டேன்.

வெளியேயுள்ள முழுமையான பத்து இந்திரியங்களும் செயல்படாமல் அடங்கிய நிலையில் அந்தக்கரணம் மட்டும் செயல்படும் அவத்தையைக் கனவு என்று கண்டேன்.

**97.** **மரணம் ஆகிய திசைஇது**
**எனும்படி மனாதி**
**கரணம் யாவையும் இறந்துஉள**
**சுழுத்தியும் கண்டேன்.**

மரணம் இது என்று கூறும்படி மனம் முதலான சகல கருவிகளும் ஒடுங்கி இருக்கின்ற நிலையினைச் சுழுத்தி அவத்தை எனத்தெரிந்து கொண்டேன். ('நான் எதையுமே உணரவில்லை' என்று தூக்கத்திலிருந்து விழித்தவன் கூறுவது அஞ்ஞான அனுபவம்)

**98.** **எஞ்சல் இன்றிஎக் கரணமும்**
**இறந்துஇருண்டு இருந்த**
**துஞ்சல் அங்குஉணர் போதமாம்**
**துரியமும் கண்டேன்.**

சுழுத்திக்கு அப்பாற்பட்ட நிலையை விவரிக்கிறான். சிறிதும் மிச்சமில்லாமல் எல்லாக்கரணங்களும் ஒடுங்கி இருந்த (புலன்கள் முதல் அந்தக் கரணம்வரை எல்லாம் ஒடுங்கிய நிலையில்) உறக்கம் என்று சொல்லக் கூடிய மரணம் போன்ற நிலையில் ஞான வடிவம் இன்னதென்று உணரக்கூடிய துரியம் என்ற நிலை தோன்றியதைக் கண்டேன்.

**99.** **துரியம் ஆகிய போதம்ஓர்**
**துளக்கம்அற்று அனைத்தின்**
**கரிய தாய்இருந்த இடம்பரன்**
**நனவுஎனக் கண்டேன்.**

சீவனுடைய துரியத்தில் உணர்ந்த ஞான வடிவம் கலக்கம் எதுவும் இல்லாமல் சர்வசாட்சியாக விழிப்புணர்வுடன் இருக்கிறது. அதுவே ஈசுவரனின் விழிப்பு நிலை என்று உணர்ந்து கொண்டேன்.

**100.** **புணர்ந்த இச்சகத்து ஒழித்துஉணர்**
**போதமாம் தனையே**
**உணர்ந்த மற்றது பரன்கனவு**
**எனும்படி உணர்ந்தேன்.**

சகலப் பிரபஞ்சத்திற்கும் நான் சாட்சி வடிவப் பிரம்மம் என்னும் பாவனையை விடுத்து, சர்வசாட்சிவடிவ அறிவாகிய தன்னையே அறிந்து நின்ற அந்த அவத்தை ஈசுவரனுக்கு சொப்பனம் என்பதை உணர்ந்தேன்.

**101. சான்று சாக்கியம் இறந்திடத்**
**தான்இருந் தமையும்**
**தோன்று உறாஇடம் பரன்சுழுத்தி**
**அதுஎனத் துணிந்தேன்.**

சான்று சாட்சி இரண்டுமே மறைந்து போனநிலை. நான் சாட்சி என்னும் பாவனையும் விளங்காத அவத்தை ஈசுவரனுக்கு சுழுத்தி என்பதாம். எந்தச் சலனமும் இல்லாமல் உணர்ச்சி, உணர்வோன் இரண்டுமே அற்ற அந்த அவத்தையை ஈசனுக்கு சுழுத்தி நிலை என்று நான் அறிந்து கொண்டேன், என்று சொற்களால் விளக்க முடியாத சுழுத்தி நிலையை ஒருவாறு விவரித்தான் சசிவன்னன்.

**102. மரித்தது என்றுஉணர்ந்து உரைத்தது**
**மரித்தஇடம் தனிலே**
**தெரித்த போதம்ஏது அதுபரன்**
**துரியமாய்த் தெளிந்தேன்.**

மரித்தது என்று உணர்ந்து கொள்ளும்படி ஒரு நினைவு இருந்தது. அந்த எல்லாமே ஒடுங்கிய நிலையில் ஒரு ஞானம், ஒரு போதம் தெரிந்தது. அது ஈசனுடைய துரியம் என்று உணர்ந்து கொண்டேன். (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி மூன்று நிலைகளையும் கடந்த நிலை)

**103. இறைஎ னும்பொருள் துரியமே**
**என்னைஆண் டவனே**
**மறையின் அந்தநல் பதப்பொருள்**
**நனவுஎன மதித்தேன்.**

என்னை ஆட்கொண்ட குருவே! ஈசுவர துரிய நிலையில் விளங்கியசேதனமே வேதங்களில் சொல்லப்பட்ட 'அஸி' என்ற பதத்தின் விளக்கமாகிய பிரம்ம சொரூபத்தின் விழிப்பு நிலை என்பதை நான் உணர்ந்து கொண்டேன்.

(இந்த நிலையில் 'தத் த்வம் அஸி' என்ற பதத்தின் முடிவான ஞானத்தால் ஏகத்துவம் சித்திக்கிறது. இரண்டு என்பதே இல்லை என்ற திட ஞானம் ஏற்படுகிறது. உலகியலில்

ஈடுபட்டு வாழ்ந்தாலும் அத்வைத ஞானம் மாறாமல் எப்போது இருக்கும். இந்த உறுதிப்பாட்டுக்கு பிரம்ம சாக்கிரம் என்று பெயர்)

**104.** **பண்டை விச்சுவ வாதனைப்**
**பழுதுபோய் முழுதும்**
**கண்ட கண்ணதே ஆகிய**
**கனவதும் கண்டேன்.**

மனிதப் பிறவிக்குரிய வாசனைகள், நினைவுகள், உலகப் பந்தங்கள் எல்லாமே நீங்கி அகிலம் முழுவதும் ஒன்றே, ஒரே பரம்பொருளின் பல்வேறு தோற்றமே என்ற பார்வையை நான் அடைந்தேன். பிரம்ம சொரூபமாகவே இருக்கின்ற நிலையில் ஆழ்ந்தேன். இதுவே பரம் பொருளின் (சொப்பன அவத்தை) கனவு நிலை என்று உணர்ந்தேன்.

(இந்த நிலையை அடைந்த சீவன் முத்தர்கள் உலகில் வாழ்ந்தாலும், இன்றியமையாத உண்பது, உறங்குவது, ஸ்நானம் செய்வது போன்ற நித்திய கர்மங்களைச் செய்தாலும் மனம் ஒடுங்கி விட்டதால் நான் பிரம்ம சொரூபமே என்ற நிச்சய நிலையிலிருந்து மாறமாட்டார்கள். இந்த நிலை வந்த பிறகு தேக உலகப் பற்றுக்கள் ஒட்டாமல் வாழ்வார்கள்)

**105.** **காட்சி யாவையும் கண்ணதுஆய்**
**அக்கணும் கரைந்த**
**மாட்சி ஆகிய அகோசரம்**
**உறக்கமாய் மதித்தேன்.**

பெயர் வடிவம் (நாம ரூபங்கள்) எல்லாவற்றையும் நீக்கி மறந்து அந்த வாசனையும் இல்லாமல் அனைத்தையும் பிரம்ம வடிவமாகப் பார்க்கும் நிலையை அடைந்தேன். புலன்களால் அறிய முடியாத சொற்களினால் விளக்க முடியாத அவத்தையில் ஆழ்ந்தேன். அதுவே பிரம்ம சொரூபத்தின் சுழுத்தி நிலை என்று உணர்ந்தேன்.

(மனம் ஒடுங்கினால் உள்ளேயும் பிரம்மம், வெளியே இருப்பதும் பிரம்மம் என்ற உணர்வுதான் மிஞ்சும். பிரம்மத்தை அறிந்த சீவன் அதிலேயே கரைந்து, சீவன் ஈசுவரன் என்ற பேதம் நீங்கி விடுகிறது)

**106.** **அரும்த வாமறை அந்தம்ஆம்**
**அகோசரம் தனில்நீ**
**இருந்த ஆறுஅறி வித்தஆறு**
**எங்ஙனம் இசைப்பேன்.**

அடைதற்கு இயலாத தவத்தினை உடைய சுவாமி! வேதங்களின் முடிவாகிய உபநிடதத்தின் வழி, எளிதில் புரிந்துகொள்ள முடியாத பிரம்மத்தினுடைய துரியாவத்தையை நான் உணர்ந்துகொள்ளும்படி தாங்கள் தீட்சை அருளிய விதத்தினையும், அடியேனுக்கு உபதேசித்த விதத்தினையும் எவ்வாறு கூறுவேன்?

**107.** **எம்பி ரான்இடம் தொறும்இடந்**
**தொறும்அது அதுவாய்த்**
**தம்பிரான் நடம்செ யும்வகை**
**சாற்றுமாறு அறியேன்.**

(குருநாதரைப் புகழ்கிறார்) எம்பிரானே! அத்தனை அவத்தைகளிலும் தாங்களே பிரம்ம சொரூபமாக விளங்கினீர்கள். தாங்கள் உபதேசித்து அருளிய 'தத்துவமஸி' என்ற மகாவாக்கியத்தின் பொருளைத் தெளிந்து ஐக்கியம் அடைந்தேன். அந்த அனுபவத்தை சொற்களால் விளக்க முடியாமல் திகைக்கிறேன்.

**108.** **ஆவி யேஅடி யேன்செய்கைம்**
**மாறுஉனக்கு என்எனில்**
**பாவி யேனது தானும்உன்**
**னுடையதாம் பண்டே.**

என் உயிருக்குயிரான சுவாமியே! உமக்கு அடிமையாகிய நான் செய்கின்ற கைம்மாறு ஏதும் இல்லை. பாவியாகிய அடியவனது உடல், பொருள், ஆவி மூன்றும் திருவடிகளைச் சரண் அடைந்தபோதே உம்முடையதாயின. ஆதலால் கொடுத்தற்கு ஒன்றும் இல்லை.

**109.** **ஆவல் செய்துஎனது ஆக்கைஉள்ள**
**அளவுநின் அடியார்க்கு**
**ஏவல் செய்வதே அன்றிமற்று**
**ஒன்றுநான் அறியேன்.**

அடியேனது உடல் இருக்கும் வரையும், உமக்கும் உம் அடியவர்க்கும் விருப்பமுடன் பணிவிடைகளைச் செய்து வருவதே அல்லாமல் வேறு ஒரு வழியினையும் நான் காணவில்லை.

**110.** **இறவுஇல் எப்பத மும்பெற**
**வேண்டிலேன் என்றும்**

**பிறவி வேண்டுவன் நின்திருப்**
**பணிசெயப் பெறினே.**

தங்களுடைய உபதேசத்தினால் எனக்குக் கிடைத்தது முடிவில்லாத வீடுபேறு. ஆனால் தேவரீருக்குத் தொண்டு செய்யும் வாய்ப்பு எனக்குப் பிறவிதோறும் கிடைக்குமானால் மீண்டும் மீண்டும் இந்த உலகத்தில் பிறக்கவே விரும்பி வேண்டுவேன். அந்த உயர்பதவியான முக்தியைக் கூட நான் விரும்பமாட்டேன்.

(குரு சிஷ்ய தொடர்பு பிறவிதோறும் தொடரக்கூடியது. இருவருமே மீண்டும் பிறவி எடுக்காத அமர நிலையை எய்திவிட்டாலும் கூட குரு சேவையின் முக்கியத்துவத்தை வலியுறுத்தவே தத்துவராயசுவாமிகள் இந்தப் பாடலை இயற்றியுள்ளார். குருவுக்குப் பணி செய்வதன் உயர்வு பக்தி மார்க்கத்திலும் சொல்லப்படுகிறது, ஞான மார்க்கத்திலும் சொல்லப்படுகிறது).

**111.** **என்றுபல கால்விழும் எழும்தொழும்**
**அழும்புரியும் என்னை இனியான்**
**நின்றுபல வாகஉரை செய்தஅவன்**
**அன்பினொடு நெஞ்சுஉருகியே.**

குருநாதரின் அன்பில் திளைத்த சசிவன்னன். “நான் செய்த குற்றங்களை மன்னித்து என்னை இனியவன் என்றும் பக்குவம் உடையவன் என்றும் நினைத்துப் பலவிதமாக உபதேசம் செய்தார் என் குருநாதர்” என்று எண்ணி எண்ணி நன்றி மேலீட்டால் உள்ளம் நெகிழ்ந்து அவர் சரணங்களில் விழுவான். எழுந்து அவர் முகத்தைப் பார்ப்பான். சிரத்தின்மேல் கை கூப்பித் தொழுவான். உணர்ச்சி மிகுதியால் கண்ணீர் பெருக்குவான்.

**112.** **ஏட்டில்அறிவு இன்றிஇறை தன்னில் அறிவு**
**இன்றிஇவ் உடம்பினுடனே**
**வீட்டில்உறை வானைஇனி வீடுபெறும்**
**என்பதுவி ளம்புகிலேமே.**

சாத்திரங்கள் படித்து அறிந்த அறிவும் இல்லாமல், (பரோட்ச ஞானம் சசிவன்னனுக்குத் தன் முயற்சியால், சாதனையால் கிடைக்கவில்லை என்பது கருத்து) சமாதி கூடி பரத்தை அறியும் அபரோட்ச ஞானமும் இல்லாமல், குருவின் கருணையால், அவருடைய தவ வலிமையால் உடலுடனேயே வீடு பேறு அடைந்தான் சசிவன்னன். சீவன் முத்தன் என்ற நிலையை அடைந்துவிட்ட சசிவன்னனை “இனி முத்தியடைவான்” என்று சொல்வது பொருந்தாது.

**113.** **வஞ்சவலி யால்நரகில் வீழ்பிதிரர்**
**அந்நரகு பாழ்படமிகா**
**விஞ்சைவலி யால்அடைய ஏறினர்**
**சுராதிபர்கள் மேல்உலகமே.**

இளைஞனாக இருந்தபோது சசிவன்னன் செய்த கொடிய பாவச் செயல்களினால் அவனுடைய பிதிர்கள் நரகத்தில் விழுந்து உழன்றனர். இப்போது அவன் அடைந்த ஞானத்தினால் தேவர்கள் உறையும் மேல் உலகத்தை அடைந்தார்கள். நரகலோகம் பாழ்பட்டுப் போயிற்று.

(ஒரு சத்புத்திரன் தவம் செய்து நல்ல குருவை அணுகி ஞானம் பெற்றால், அவனுடைய ஏழு தலைமுறையைச் சேர்ந்த முன்னோர்கள் கர்ம வினைகள் நீங்கப் பெற்று உயர்பதவி அடைவார்கள் என்பது கருத்து)

**114.** **தேவரும்ம னித்தரும்இ வன்தொழில்**
**வியந்துரைசெ யப்படுவதோ**
**மூவரும்வ ணங்கிமுடி யால்அவனது**
**ஏவல்செய முந்துறுவரே.**

தன்னுடைய சற்குருவுக்கு சசிவன்னன் செய்த பணிவிடைகளின் சிறப்பையும், அவனுடைய புலனடக்கத்தையும் தேவர்களாலோ மனிதர்களாலோ எடுத்து சொல்ல முடியாது. நான்முகன், திருமால் சிவபெருமான் ஆகிய மும்மூர்த்திகளும் கூட அவன் ஏவிய பணிகளைச் சிரம் தாழ்த்திச் செய்ய முன்வருவார்கள்.

**115.** **ஞானியைந ரன்சுரன்எ னாதுஒழிக**
**ஞாலம்உய நாதன்அருளால்**
**மேனியது கொண்டுதனை நல்கவரும்**
**என்று அறையும் வேதமுடிவே.**

வேத நூல்களும், வேதாந்தமும் இந்தப் பூவுலகில் பிறந்து வாழ்கின்ற மக்களைக் கடைத்தேற்ற வேண்டும் என்று அளப்பரிய கருணையோடு இறைவன் மனித உருவில் அவதாரம் செய்வார் என்று கூறுகின்றன. அதனால் பிரம்ம ஞானிகளை (சீவன் முத்தர்களை) 'இவன் மனிதன்' 'இவன் தேவன்' என்று கூறுவது சரியில்லை. சீவன் முத்தியடைந்த ஞானி பரமேசுவரனின் அவதாரம் என்று உணர்க.

**சசிவன்ன போதம் மூலமும் பொருள் விளக்கமும் நிறைவுற்றது.**

## கோவிலூர் மரபில் பாடத்திட்டமாக உள்ள 16 வேதாந்த நூல்கள்

1. **நாநாசீவ வாதக் கட்டளை**
(சேஷாத்திரி சிவனார் இயற்றியது)

2. **கீதாசாரத் தாலாட்டு**
(திருவேங்கட நாதர் இயற்றியது)

3. **சசிவன்ன போதம்**
(எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

4. **மகாராஜத் துறவு**
(விருத்தாசலம் குமார தேவர் இயற்றியது)

5. **வைராக்கிய சதகம்**
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

6. **வைராக்கிய தீபம்**
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

7. **இலட்சணா விருத்தி**
(கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)

8. **வேதாந்த சூடாமணி**
(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியது)

9. **கைவல்ய நவநீதம்**
(நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் இயற்றியது)

10. **விவேக சூடாமணி**
(திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகள், இயற்றியது)

11. **அஞ்ஞவதைப் பரணி**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

12. **பஞ்ச தசி**
(நித்தியானந்த சுவாமிகள் வீர. சுப்பையா சுவாமிகள் இயற்றியது)

13. **ஈசுவர கீதை**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

14. **பிரம்ம கீதை**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

15. **பகவத் கீதை**
(பாட்டனார் இயற்றியது)

16. **ஞான வாசிட்டம்**
(வீரை. ஆளவந்தார் இயற்றியது)



கோவிலூர் ஆதீனம்
சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்



கோவிலூர் மடாலயம்



கோவிலூர் ஆதீனம்
சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்



கோவிலூர் மடாலயம்

